*Muslim muracu*

*Malar 5, ita<u>l</u> 8*

*February 1953*

Record no. 215

# வியாபாரம் செய்வது எப்படி?

ஆசிரியர் : M. R. M. அப்துர் ரஹீம் B. A.,

நீங்கள் வியாபாரம் செய்ய விரும்புகிறீர்களா? பங்கு தாரராகச் சேர விரும்புகிறீர்களா? வர்த்தக உலகில் நிகரற்று விளங்க ஆசைப்படுகிறீர்களா?

இதோ உங்களுக்கு எங்கள் உதவி! பல நூறு ஆங்கில நூல்களின் சாரம். சிக்கலான வியாபாரத் தந்திரங்களை எளிதில் புரிந்துகொள்ள உதவும் "வியாபாரம் செய்வது எப்படி" என்ற புத்தகத்தை அளிக்கிறோம். விலை ரூ. 3-0-0 தான். மலாயா ஆர்டர்களுக்கு முன் பணம் தேவை.

அன்பு நூல் நிலையம்
132, பிராட்வே : : சென்னை-1.



முஸ்லிம் முரசு

## சந்தா விகிதம்

ஈத், மீலாத் மலர்களுடன்

| உள்நாடு — இந்தியா, சிலோன் | ரூ. | அ. | வெளிநாடு — பர்மா, மலேயா, சிங்கப்பூர் | ரூ. | அ |
|---|---|---|---|---|---|
| தனி இதழ் | 0 | 6 | தனி இதழ் | 0 | 8 |
| ஒரு வருடம் | 4 | 8 | ஒரு வருடம் | 6 | 0 |
| அரை வருடம் | 2 | 8 | அரை வருடம் | 3 | 8 |
| 2 வருடம் | 8 | 8 | 2 வருடம் | 11 | 0 |

ஆயுட் சந்தா ரூ 100—0—0

ஒரு வருடத்துக்குக் குறையாத சந்தா செலுத்துகிறவர்களுக்கு மட்டுமே ஈத், மீலாத் மலர்கள் குறைந்த விலைக்கு அனுப்பப்படும்.

மானேஜர்,
முஸ்லிம் முரசு
132, பிராட்வே, சென்னை—1.


# பொருள் அடக்கம்


முஸ்லிம் முரசு

அன்பும் இன்பமும் அறிவும் ஆற்றலும்
பண்பும் புகழும் இனிது விளங்க முரசு முழங்கவே!

மலர் 5 | சென்னை, பிப்ரவரி 1953 | இதழ் 8




முரசில் வருகின்ற கதைகளும் அவற்றில் உள்ள பெயர்களும் கற்பனையே.

## அட்டைப் படம்

உலக அரசியல் அரங்கிலே சென்ற வருடம் ஜூலையில் திடீரென ஒரு புதிய மனிதர் உதயமானார். அன்று முதல் இன்று வரையில் அவர் உலகப் பத்திரிகைகளுக்குப் புதிய புதிய செய்திகள் தராத நாட்களே கிடையாது என்று கூறலாம். அந்த அபூர்வ மனிதர்தான் இந்த இதழின் அட்டையை அலங்கரிக்கின்றார். அவரைப் பற்றி இன்னும் சில புதிய செய்திகளைக் கூறும் கட்டுரையை இந்த இதழில் 11-ம் பக்கத்தில் காணலாம்.

## ம. கி. பாதுகாப்புத் திட்டத்திலே

# பாக்கிஸ்தான்!

சென்ற சில வாரங்களாக பாக்கிஸ்தானைப்பற்றிய முக்கியமான செய்தி யொன்று உலக மக்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்து வந்திருக்கின்றது. அதாவது, பிரிட்டிஷ் அமெரிக்க வல்லரசுகளின் மத்திய கிழக்குப் பாதுகாப்புத் திட்டத்திலே பாக்கிஸ்தானும் பங்கு பெறப்போகிறதென்ற செய்திதான் அது.

சோவியத் ருஷ்யாவின் தாக்குதல்களிலிருந்து தங்களைத் தற்காத்துக் கொள்ளும்பொருட்டு, பிரிட்டிஷ் அமெரிக்க வல்லரசுகள் தங்களுக்குள் ஒரு கூட்டுப் பாதுகாப்பு உடன்படிக்கை செய்துகொண்டு வருகின்றன. ஐரோப்பாவிலே "வட அட்லாண்டிக் உடன்படிக்கை ஸ்தாபனம்" என்னும் பெயருடன் ஒரு தற்காப்பு உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டிருக்கிறது. ஐரோப்பிய நாடுகளின்மீது சோவியத் ருஷ்யாவின் தாக்குதல் ஏற்பட்டால் அதனை முறியடிக்க வேண்டுமென்ற முன்னேக்குடன் அமெரிக்காவும் மற்றும் 11 நாடுகளும் சேர்ந்த இந்த அட்லாண்டிக் பாதுகாப்பு உடன்படிக்கை உதயமாகியுள்ளது.

இத்தகைய தற்காப்பு ஏற்பாடு ஐரோப்பாவுக்குமட்டும் இருந்தால் போதுமா? சோவியத் ருஷ்யாவுக்கு ஆசிய நாடுகளிலே ஆதிக்கம் ஏற்படுமாயின், அதனுல் ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் அபாயமே விளையுமென்பது திண்ணம். எனவேதான் ஆசிய நாடுகளுக்கு அரணாக விளங்கும் மத்திய கிழக்கு மண்டலத்திலே மற்றொரு பாதுகாப்பு ஏற்பாடு செய்துகொள்ள வேண்டுமென்று பிரிட்டிஷ் அமெரிக்க வல்லரசுகள் விரும்புகின்றன. இதற்குத்தான் "மத்திய கிழக்குப் பாதுகாப்பு அமைப்பு" (Middle East Defence Organisation) என்று சொல்லப்படுகிறது. இந்தக் கூட்டுப் பாதுகாப்புத் திட்டத்தில் பாக்கிஸ்தானும் சேரப்போகிறது என்ற வதந்திதான் இன்று உலக மக்களின் கவனத்தைக் கவர்ந்துள்ளது.

மத்திய கிழக்குப் பாதுகாப்பு அமைப்பில் பாக்கிஸ்தான் சேரப்போவது உண்மையாக இருக்குமாயின், அதன் விளைவுகள் குறித்து நாம் கவலைப்படாமல் இருக்க முடியாது. பாக்கிஸ்தானும் இந்தியாவும் பூரண சுதந்தரமுள்ள தனித்தனி



நாடுகள் என்பதில் ஐயமில்லை. இரண்டு நாடுகளும் வெளிநாட்டு உறவில் வெவ்வேறு விதமான கொள்கைகளைப் பின்பற்றுவதற்கும் உரிமையுண்டு. ஆனுல் இந்தியாவையும் பாக்கிஸ்தானையும் பொறுத்தவரையில், வெளிநாட்டுக் கொள்கையில் இவ்விரு நாடுகளும் வெவ்வேறு திசைகளை நோக்கிச் செல்ல வியலாது. பாக்கிஸ்தான் போர்முனையிலே நிற்கும்போது, பாரதநாடு புது டில்லியிலே சமாதான பஜனை செய்து கொண்டிருக்க முடியாது.

ஏனெனில், இரண்டு நாடுகளும் ஒரே நாடு என்று சொல்லக் கூடியதாக இவற்றின் பூகோள அமைப்பு இருக்கிறது. இரண்டு நாடுகளின் எல்லைக் கோடுகளும் ஒன்றை மற்றொன்று தொட்டுக்கொண்டு இருக்கின்றன. எனவே. இவ்விரு நாடுகளும் வெளிநாட்டுக் கொள்கையில் வெவ்வேறு திசைகளை நோக்கிச் செல்லுவது விபரீதமாகவே முடியும். ஆகவேதான் இந்தியப் பிரதமர் நேருஜி இதைப்பற்றித் தமது கவலையைத் தெரிவித்துக் கொண்டிருக்கின்றுர்: மத்திய கிழக்குப் பாதுகாப்பு அமைப்பிலே பாக்கிஸ்தான் பங்கு பெறுமாயின் அதனைப் பார்த்துக்கொண்டு, "யாருக்கு வந்த விருந்தோ" என நாம் வாளாயிருக்க முடியாது என்று நேருஜி கூறுகிறுர். இதுவரையில் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை, சர்வ தேசப் பிரச்னைகளில் நடுநிலைமை வகிப்பதாகவே இருந்து வந்திருக்கிறது. எந்த வல்லரசு நாடுகளுடனும் ஐக்கியமாகி, ஆக்கிரமிப்புப் போர்களில் கலந்துகொள்வதை இந்தியப் பிரதமர் நேருஜி விரும்பவில்லை. இதே கொள்கையைத்தான் இனிமேலும் பின்பற்றிவர அவர் விரும்புகிறுர். ஆனுல், பாக்கிஸ்தானின் அன்னிய நாட்டுக் கொள்கை எதிர்காலத்தில் பிரிட்டிஷ் அமெரிக்க வல்லரசுகளுக்கு ஆதரவாக இருக்குமோ என்று இப்போது சந்தேகிக்கப்படுகிறது. மத்திய கிழக்குப் பாதுகாப்பு அமைப்பிலே பாக்கிஸ்தான் சேர்ந்துவிடுமாயின் அதன் விளைவாக இந்தியாவின் அன்னிய நாட்டுக் கொள்கையிலும் மாறுதல் ஏற்படவேண்டியது அவசியமாகிவிடும்.

மத்திய கிழக்குப் பாதுகாப்பு அமைப்பில் சேருமாறு பாக்கிஸ்தான் அழைக்கப் பட்டிருக்கிறதென்றும், அதற்கு வேண்டிய பேச்சு வார்த்தைகள் நடந்து வருவதாகவும் பாக்கிஸ்தான் பத்திரிகைகளில் வெளிவந்த செய்திக்கு ஆதாரமில்லை என்று பாக்கிஸ்தான் பிரதமர் காஜா நஜீமுத்தீன் கூறுகிறுர். பிரிட்டிஷ் அமெரிக்க அரசியல் வட்டாரத்திலும் இது உண்மையல்லவென்று மறுக்கப்படுகிறது.

மத்திய கிழக்குப் பாதுகாப்பு அமைப்பிலே சேருமாறு பாக்கிஸ்தான் இதுவரை அதிகார பூர்வமான முறையில்

அழைக்கப்படாமல் இருப்பது உண்மையாக இருக்கலாம். ஆனால் அதைப்பற்றி அமெரிக்கா இதுவரை சிந்திக்கவேயில்லை என்று சொல்ல முடியாது. ஏனெனில், மத்திய கிழக்குப் பாதுகாப்புத் திட்டத்தில் பாக்கிஸ்தானுக்கு மிக முக்கியமான பங்கு இருக்கிறது. அதன் இராணுவ முக்கியத்துவம் குறித்து, அண்மையில் பாக்கிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் விஜயம் செய்த அமெரிக்க கப்பற்படையின் உதவி அட்மிரல் ரைட் என்பவர் ஜனவரி 27ந் தேதியன்று கராச்சியில் கூறியிருப்பதைக் கவனிக்கவேண்டும். "பாக்கிஸ்தானின் இராணுவ முக்கியத்துவத்தை அறிய வேண்டுமாயின், உலகப் படத்தை உற்று நோக்குங்கள்" என்று அவர் கூறியிருக்கின்றார். இதிலிருந்து பாக்கிஸ்தானின் இராணுவ முக்கியத்துவத்தை அமெரிக்கா நன்கு அறிந்து கொண்டிருக்கிறதென்பதில் ஐயமில்லை. எனவே, மத்திய கிழக்குப் பாதுகாப்பு ஏற்பாட்டில் சேர்ந்துகொள்ளுமாறு பாக்கிஸ்தான் இதுகாறும் அழைக்கப்படாமல் இருப்பது உண்மையாகயிருப்பினும், எதிர்காலத்தில் நிச்சயமாக அழைக்கப்படக்கூடும் என்பது உறுதி.

மத்திய கிழக்கு நாடுகளாகிய எகிப்திலும் ஈரானிலும் இன்றுள்ள அரசியல் நெருக்கடிகளையும், பிரிட்டிஷ் எதிர்ப்புணர்ச்சியையும் எண்ணிப் பார்க்கும்போது, பிரிட்டிஷ் அமெரிக்க வல்லரசுகளின் பாதுகாப்பு உடன்படிக்கையில் பாக்கிஸ்தான் சேருமென்று நாம் எதிர்பார்க்க முடியாது. இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்கு மிடையே காஷ்மீர் விஷயத்தில் கருத்து வேற்றுமைகள் இருக்கலாம். சோவியத் ருஷ்யாவின் கொள்கைகளும் திட்டங்களும் பாக்கிஸ்தானுக்குப் பாதகமாக இருக்கலாம். இதற்காக முஸ்லிம் நாடுகளாகிய எகிப்தையும் ஈரானையும் பகைத்துக்கொண்டு அவைகளின் எதிரிகளுடன் பாக்கிஸ்தான் கூடிக் குலாவ முடியாது; கூட்டு உடன்படிக்கை செய்துகொள்ளவும் இயலாது. மத்திய கிழக்கின் மேற்குத் திசையிலேயுள்ள துருக்கியைத் தன் பக்கம் சேர்த்துக் கொண்டதைப்போல், கீழ்க்கோடியில் பாக்கிஸ்தானைப் பக்கத்துணைக்கு அழைத்துக்கொள்ளலாம் என்று அமெரிக்கா திட்டம் போடுகிறது. இந்த முயற்சியில் அமெரிக்கா நிச்சயமாக வெற்றிபெற முடியாது. சூயெஸ் கால்வாய்ப் பகுதியிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகள் வெளியேறும் வரையில் எகிப்து நாடு பிரிட்டிஷ் அமெரிக்க வல்லரசுகளுடன் ஒத்துழைக்கப்போவதில்லை. ஈரானின் எண்ணெய்த் தகராறு தீரும்வரையில் பாரசீகமும் தனது பகைமை யுணர்வு நீங்கி, பிரிட்டிஷ் அமெரிக்கப் பாதுகாப்பு திட்டத்தில் பங்கு பெறப்



போவதில்லை. எகிப்தும் ஈரானும் இதில் ஒத்துழைக்க முன்வரும் வரையில் பாக்கிஸ்தானும் இதில் பங்குகொள்ளத் துணியுமென்று நாம் நினைக்கவில்லை.

ஒருகால் எகிப்திலே சூயெஸ் கால்வாயிலிருந்து பிரிட்டிஷ் படைகள் வாபஸாகி, ஈரானின் எண்ணெய்த் தகராறு தீர்ந்து, பிரிட்டனுக்கும் எகிப்து, ஈரானுக்குமிடையே நேச உடன்படிக்கை ஏற்படுமாயின், அதற்குப்பின், பாக்கிஸ்தானும் மத்திய கிழக்குப் பாதுகாப்புத் திட்டத்தில் பங்குபெற நேர்ந்தால், பாரத நாடு என்னசெய்வது? பாக்கிஸ்தான் அதன் வழியில் போகட்டும் என்று பார்த்துக்கொண்டு இருக்க முடியுமா? இந்த சந்தர்ப்பத்தில் இந்தியாவும் பாக்கிஸ்தானும் ஒரேவிதமான கொள்கையைத்தான் பின்பற்றவேண்டியதாக இருக்கும். எனவேதான், இந்தியப் பிரதமர் நேருஜியவர்கள் பாக்கிஸ்தான் பிரதமர் காஜா நஜீமுத்தீனுடன் அண்மையில் சில காலமாகக் கடிதப் போக்குவரத்து நடத்தி வருகின்றார் என்று நம்புகிறோம்.

எதிர்காலத்தில் உலக சமாதானத்தைப் பாதுகாக்க வேண்டிய மகத்தான பொறுப்பும் கடமையும் பாக்கிஸ்தானுக்கு இருக்கிறது. இதில் பாக்கிஸ்தான் ஒரு பாதையிலும், இந்தியா இன்னொரு பாதையிலும் செல்லுமாயின், இரு நாடுகளுக்கும் அபாயமே விளையும். இதைக் கருத்தில் கொண்டாவது இந்தியாவும் பாக்கிஸ்தானும் என்றும் ஒற்றுமையாக இருக்கவேண்டுவது இன்றியமையாததாகும்.

சென்ற இரண்டு ஆண்டுகளுக்குமுன் இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்குமிடையே பகைமை யுணர்வு முற்றியிருந்த நேரத்தில், காலஞ்சென்ற பாக்கிஸ்தான் பிரதமர் லியாக்கத் அலீகானுடன் நமது பிரதமர் நேருஜி நடத்திவந்த கடிதப் போக்குவரத்தின் பயனாகத்தான், "நேரு-லியாக்கத் டில்லி உடன்படிக்கை" நிறைவேறி, நாட்டிலே ஒற்றுமையுணர்ச்சியும் சமாதான சூழ்நிலையும் நிலவின, அதேவண்ணம் இப்போது நடைபெறும் கடிதப் போக்குவரவின் பயனாக இரு நாட்டுப் பிரதமர்களும் நேரில் கலந்து பேசவும், உடன்படிக்கை செய்துகொள்ளவும் முன்வருவார்கள் என்று ஆவலுடன் எதிர்பார்க்கின்றோம்.

---




# காந்திஜியின் வாக்கும் காங்கிரஸின் போக்கும்

சென்ற மாதம் ஹைதராபாத்திலே நானல் நகரில் நடைபெற்ற 58-வது காங்கிரஸ் மாநாடு வழக்கத்துக்கு மாறாக விருவிருப்பு இன்றி 'சப்' என்று கூடிக் கலைந்திருக்கிறது. மேற்படி காங்கிரஸுக்காகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற 3,600 பிரதிநிதிகளில் 1,700 பேர்தான் வந்திருந்தார்கள். அதாவது, காங்கிரஸ் ஊழியர்களிலே சரிபாதிபேர்கள் கூட இந்த வருஷக் காங்கிரஸில் கலந்து கொள்ளவில்லை. இதற்கு முன் எந்த ஆண்டிலும் இவ்வளவு மோசமான நிலையை நாம் கண்டதில்லை. நாட்டின் நிர்மாண வேலைகளை நடத்தி வைப்பதற்கு இந்தக் காங்கிரஸ் ஊழியர்களைத்தான் நேரு சர்க்கார் நம்பிக் கொண்டிருக்கிறது! இவர்களை நம்பிக் கொண்டு ஒரு ஐந்து வருட திட்டத்தையும் அமல் நடத்த அரசாங்கம் துணிந்துவிட்டது. இந்த நிலையில் பொறுப்புள்ள காங்கிரஸ்காரர்களே தங்கள் கடமையை மறந்து வீட்டிலே உறங்கிக்கொண்டிருக்கிறார்கள்.

இதற்கு முந்திய வருஷங்களிலெல்லாம் இட நெருக்கடியுடன் கூடிய காங்கிரஸ் மகாசபைக் கூட்டம், இந்த ஆண்டு மட்டும் "அந்தோ, பாவம்!" என்று பரிதாபப்படும்படியாகக் கூடிக் கலைந்திருக்கிறது! இதற்குக் காரணம் என்ன?

இந்த வருடக் காங்கிரஸை அவர்கள் அலட்சியம் செய்ததற்கு ஒரு முக்கியக் காரணம் இருக்கிறது. சென்ற ஆண்டிலும் அதற்கு முந்திய வருஷங்களிலும் இந்த நாடு ஒரு மாபெரும் பொதுத் தேர்தலை எதிர்நோக்கிக் கொண்டிருந்தது. அந்தத் தேர்தல்களில் அபேட்சகர்களாக நிற்கவும், அமைச்சர் வேலை பார்க்கவும் அநேகமாக ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் விரும்பியிருப்பார்கள். அதற்கு வேண்டிய முன்னேற்பாடுகள் செய்வதற்கும், முக்கியமானவர்களைக் காண்பதற்கும் கூட்டம் கூட்டமாக காங்கிரஸுக்கு விஜயம் செய்தனர். அந்த நிலை இன்று இல்லை. நாடெங்கும் அடுத்த பொதுத் தேர்தல் வருவதற்கு இன்னும் 4 ஆண்டுகள் செல்ல வேண்டும். எனவே, இந்த வருடம் மட்டுமல்ல; அடுத்த ஆண்டிலும் காங்கிரஸ் பந்தல் காலியாகத்தான் இருக்கப் போகிறதென்று இப்போதே கூறிவிடலாம். காங்கிரஸ்காரர்கள் பலர் பதவி தேடி அலைகிறார்கள் என்பதற்கு இதைவிட வேறு ஒரு ஆதாரம் வேண்டியதில்லை. இதை எதிர்பார்த்துத்தான் இந்திய சுதந்தரம் பெற்றவுடன், "காங்கிரஸைக் கலைத்து விடுங்கள்" என்று காந்தி மகான் கூறினார் போலும்! அவருடைய யோசனையின்படியே செய்திருந்தால், காங்கிரஸ் கட்சியினர் இவ்வளவு மோசமான நிலைமைக்கு வந்திருக்கமாட்டார்கள்.

அண்மையில்தான் சென்ற மாதம் 30-ந் தேதியன்று காந்தி மகானின் மறைவு நாள் நாடெங்கும் நினைவு கூரப்பட்டது. அன்றைய தினந்தான் 5 ஆண்டுகளுக்கு முன் (1948) அவர் அநியாயமாக கொலைப்பாதகன் ஒருவனால் சுட்டுக் கொல்லப்பட்டார். அவர் கொல்லப் படுவதற்குச் சில தினங்கள் முன்பாகத்தான் காங்கிரஸைக் கலைத்து விடுங்கள்


அரிய வரலாற்று ஓவியம்? ஒப்பற்ற கலைக் களஞ்சியம் !!

## தெ. இ. மு. கல்விச் சங்கப்

# பொன் விழா மலர்

தென் இந்திய முஸ்லிம் கல்வியின் 50 ஆண்டு வரலாறு!

முஸ்லிம் கல்லூரிகள் பற்றிய கட்டுரைகள் !!

நூற்றுக் கணக்கான தலைவர்களின் படங்கள் !!!

இந்தியத் தலைவர்களின் வாழ்த்துச் செய்திகள். ஆறு வர்ண முகப்பு அட்டை ஆகியவைகள் கொண்டது.

விற்பனைக்காக சில பிரதிகளே ஒதுக்கப்படுகின்றன. அரிய வாய்ப்பைத் தவறவிடாதிருக்க முன்பணம் அனுப்பிப் பதிவு செய்து கொள்க!

இந்தியா, இலங்கை, (தபால் செலவுட்பட) ரூ. 3 0 0
மற்ற வெளிநாடுகளில் 3 8 0

கௌரவச் செயலாளர்,

தெ. இ. முஸ்லிம் கல்விச் சங்கம்

49, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14

என்று அவர் கூறினர். காங்கிரஸ் அதிகாரப் பதவிக்கு வந்தால் அதில் ஊழலும் இலஞ்சமும் மலிந்து விடும் என்று மகாத்மா எதிர்பார்த்திருக்க வேண்டும். காங்கிரஸ்காரர்களிடையே பொதுத் தொண்டில் உற்சாகம் குறைந்திருக்கிறது. பொது மக்களும் அதன் நடவடிக்கைகளில் அக்கறை காட்டுவதில்லை. "காங்கிரஸ்தான் நாடு; நாடுதான் காங்கிரஸ்" என்ற பழைய நிலை போய் விட்டது. மக்களை விட்டு வெகுதூரம் காங்கிரஸ் விலகி நிற்கிறது. எனவேதான், நாடு சுதந்தரம் பெற்றவுட[ன்] காங்கிரஸின் கடமை முடிந்[து] விட்டதாக நினைத்து அதனை கலைத்துவிடுங்கள் என்று காங்[கி]ரஸ்ஸுக்கு காந்திஜி யோசனை கூறினர். அந்த யோசனையை அவர்கள் ஏற்கவில்லை. ஆனால் காங்கிரஸ் நாளுக்கு நாள் நாட்[டு] மக்களிடையே செல்வாக்[கை] இழந்து வருவதைப் பார்க்கு[ம்] போது, காந்திஜியின் கூற்று எவ்வளவு உண்மையாக முடிந்திருக்கிறதென்பதை, ஒப்புக்கொள்ளு[கி]ன்றோம்.

# இன்னும் இரண்டு 'சைபர்' தேவை!

1952 டிசம்பரில் நடைபெற இருந்த, தென் இந்திய முஸ்லிம் கல்விக் கழகப் பொன் விழா, 1953 ஏப்ரல் மாதத்துக்கு ஒத்தி வைக்கப்பட்டிருப்பதை செய்திப் பத்திரிகைகள் வாயிலாக நேயர்கள் அறிந்திருக்கலாம்.

கல்விக் கழகத்தின் சேவையைப் பற்றி சென்ற நவம்பர் இதழில், "அறிவை வளர்க்கும் பணியில் அனைவரும் பங்கு பெறுவோம்" என நாம் எழுதியிருந்ததையும், அதே இதழில் வெளியிட்டிருந்த கட்டுரையையும் வாசகர்களுக்கு மீண்டும் நினைவூட்டுகிறோம்.

பொன் விழாவை ஒட்டி 5 இலட்ச ரூபாய் நிதி திரட்ட கழகம் எண்ணியுள்ளது. இந்நிதி, இருப்புப் பெட்டியில் இறுக்கிப் பூட்டி வைத்து மகிழ்வதற்கோ, அல்லது, நடைமுறையில் இல்லாத ஒரு காரியத்தை இனி செய்யப் போவதாக ஆசை வார்த்தைகள் காட்டியோ திரட்டப்படவில்லை. நடைபெற்றுவரும் 'புதுக் கல்லூரியை முதல்தர கல்லூரியாக்கவும், அரைகுறையாக விடப்பட்டுள்ள கல்லூரிக் கட்டிடத்தைக் கட்டி முடிக்கவும், மாணவர் விடுதி கட்டவும், 'முஸ்லிம் மாணவர் உபகாரச் சம்பள நிதி'யை விரிவுபடுத்தவுமே இந்நிதி பயன்படுத்தப்படப் போகிறது.

இந்த நல்ல காரியத்திற்காகப் பொருளுதவி கோரி நாம் விடுத்த வேண்டுகோள், ஆயிரக்கணக்கான வாசகர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்குமென்பதில் ஐயமில்லை. நம்வேண்டுகோளுக்கிணங்க, மலாயா பி[ன]னைச் சேர்ந்த ஜனப் K. M. முஹம்மது இப்ராஹீம் அவர்கள் முதன் முதலில் ரூ. 19-10-0 அனுப்பிவைத்தார். அவரது ஆர்வத்தை நாம் பாராட்டுகிறோம்.

பினங்கு ஜனப் M. N. முஹம்மது யூசுப் அவர்கள் எழுதியுள்ள கடிதம் நமக்கு மிகவும் உற்சாகம் அளிப்பதாக இருப்பதுடன், மற்றவர்களுக்கும் ஒரு முன் மாதிரியாக இருக்கிறது:

"முஸ்லிம் முரசு நவம்பர் இதழில் 'அறிவை வளர்க்கும் பணியில் அனைவரும் பங்கு கொள்வோம்' என்ற தலைப்பின் கீழ் வரையப்பட்டிருந்த வாசகங்களையும், பிறிதோரிடத்தில் தென் இந்திய முஸ்லிம கல்விக் கழகத்தின் சேவையையும், கண்ணுற்றோம். அதன் எதிரொலியாக எங்களின் ஏழ்மையான இளம் உள்ளங்களில் உதித்த உணர்ச்சியின் பயனே 'தாவூது போஜன சாலை' சிப்பந்திகளாகிய நாங்கள் அகமகிழ்ந்து அளிக்கும் இச்சிறு தொகை" எனக் குறிப்பிட்டு ஜனப் முஹம்மது யூசுப் அவர்கள் 50 ரூபாய்க்கு ஒரு டிராப்ட் அனுப்பியிருக்கின்றனர். 11 தொழிலாளச் சகோதரர்கள் சேர்ந்து அளித்த இச்சிறு தொகையை ஐயாயிரம் ரூபாயாக மதித்து, தெ. இ. முஸ்லிம் கல்விச் சங்க செயலாளருக்கு அனுப்பி வைத்தோம்.

நபிகள் நாயகத்தின் திருவாக்கிற்கு இணங்க, கல்விக்கு உதவுதல்போன்ற உன்னதமான காரியம் வேறு எதுவுமில்லை. நபி பெருமானின் கருத்துக்கு ஏற்ற வண்ணம் கல்வித் துறையில் நல்ல முறையில் முன்னேறியிருக்க வேண்டிய நாம் இன்று எவ்வளவு பிற்போக்கான நிலையில் இருக்கிறோம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். இப்படி எண்ணிப் பார்த்து இரவெல்லாம் கண்ணீர் சொரிந்த 'வண்ணம் கதறியழுத சர் சய்யித் அஹ்மத்கான் போன்ற தியாகிகள் இன்று நம்மிடையே இல்லையெனினும், அவர்களது சேவையின் சின்னமாக இன்றும் இயங்கி வரும் கல்வி ஸ்தாபனங்களையாவது நாம் கட்டிவளர்க்க வேண்டாமா? அவைகளின் முன்னேற்றத்திற்காக முன்னின்று உழைக்க வேண்டாமா?

பொன் விழாவைபொட்டி 5 இலட்ச ரூபாய் நிதி திரட்ட வேண்டுமென்று திட்டம் போடப்பட்டிருக்கிறது. ஆனால் இது காறும் ஏறத் தாழ ஐயாயிரம் ரூபாய்தான் வசூலாகியிருக்கிறது என்பதை இதன் கீழே காணலாம். அதாவது, எதிர்பார்க்கப்பட்ட தொகைக்கு இரண்டு 'சைபர்' குறைகிறது! ஆகையால், இன்னும் இரண்டு சைபர்கள் ஏற்வேண்டும். உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் உள்ள நம் வாசக நேயர்கள் மனம் துணிந்தால் இரண்டு சைபர்களைச் சேர்ப்பது ஒரு பெரிய காரியமல்ல. இரண்டு சைபர்கள்தான்! நம் இளைஞர்கள் முயன்றால் இது என்ன பிரமாதம்? இரண்டே வாரத்தில் சேர்த்துவிட முடியும்!

பொன் விழா நடைபெற இன்னும் இரண்டொரு மாதங்களே உள்ளன. ஆகவே ஒவ்வொருவரும் அவரவர் சக்திக்கியன்ற அளவு தனித் தனியாகவோ, பிறரிடம் வசூலித்தோ விரைவிலேயே அனுப்பித்தர வேண்டுகிறோம்.

பொருளுதவி அனுப்ப வேண்டிய விலாசம் :

Muslim Educational Association of Southern India,
Rayapettah,
Madras-14

# தென் இந்திய முஸ்லிம் கல்விக் கழகப் பொன்விழா நிதி

'புதுக் கல்லூரி' மாணவர்கள் வசூல் செய்தது

| | | | |
|---|---|---|---|
| கோவை சென்ற குழு வசூலித்தது | ரூ. 705 | 8 | 0 |
| ஹைதராபாத் ,, ,, | ரூ. 542 | 8 | 0 |
| வால்டேர் ,, ,, | ரூ. 513 | 0 | 0 |
| பெங்களூர் ,, ,, | ரூ. 487 | 8 | 0 |
| மதுரை ,, ,, | ரூ. 367 | 0 | 0 |
| A. K. A. அப்துஸ்ஸமது காரையில் வசூலித்தது | ரூ. 224 | 0 | 0 |
| ரஹீமுத்தீன் சென்னையில் வசூலித்தது | ரூ. 400 | 0 | 0 |
| அஸத் அலீ ,, | ரூ. 100 | 0 | 0 |
| மாணவர்கள் சில்லரை வசூல் ,, | ரூ. 394 | 0 | 0 |
| கழக நிர்வாகக் குழு அங்கத்தவர் A. S. முஹம்மது அலி வசூலித்தது | ரூ 911 | 8 | 0 |
| அஹ்மது ஹாஜி மூஸா ஸேட் | ரூ 100 | 0 | 0 |
| நீடூர் A. அப்துல் ஹக்கீம் | ரூ 158 | 0 | 0 |
| சேலம் A. A. கான் | ரூ 25 | 0 | 0 |
| காஞ்சி செய்யித் இஸ்ஹாக் | ரூ 10 | 0 | 0 |
| விசாகை. M. A. ரஹ்மான் | ரூ 20 | 0 | 0 |
| ஸர்தார் ஜஹான் பேகம் | ரூ 190 | 0 | 0 |
| புதுக் கல்லூரி ஆசிரியர்கள் நன்கொடை | ரூ 54 | 8 | 0 |
| பினங்கு தாவூது போஜனசாலை சிப்பந்திகள் (முஸ்லிம் முரசு மூலம்) | ரூ. 50 | 0 | 0 |
| பீகன் K. M. முஹம்மது இப்ராஹீம் (முஸ்லிம் முரசு மூலம்) | ரூ 19 | 10 | 0 |
| சிங்கை, K. E. அப்துர் ரஷீது | ரூ 15 | 0 | 0 |
| ஜனபா, அலீ முன்னிஸா பேகம் | ரூ 10 | 0 | 0 |
| கான் பஹாத்தூர் ஜவாது ஹுஸைன் சாஹிப் | ரூ 10 | 0 | 0 |
| H. அப்துர் ரஹீம் ஸேட் | ரூ 25 | 0 | 0 |
| வர்கலை. S. S. முஹம்மது இஸ்மாயீல் சாஹிப் B.E., | ரூ 5 | 0 | 0 |
| கழக செயலாளர் வசூலித்த நன்கொடை | ரூ 3 | 0 | 0 |
| பெயர் வெளியிட விரும்பாதவர் | ரூ 24 | 0 | 0 |
| M. H. ஜமால் முஹ்யித்தீன் சாஹிப் | ரூ 10 | 0 | 0 |
| டாக்டர் M. A. ஆலம், சென்னை | ரூ 50 | 0 | 0 |
| ஆசிரியர், முஸ்லிம் முரசு, சென்னை | ரூ 25 | 0 | 0 |
| ஆக கூடியது | ரூ 5449 | 2 | 0 |




## வீரர். முஹம்மது நஜீபின் "விடுதலை இயக்கம்"

ஜனநாயக ஆட்சி எல்லாக் காலத்துக்கும் தேசத்துக்கும் ஏற்றதல்ல என்பதற்கு எகிப்து நாடு இன்று ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இருக்கிறது. சுமார் 6 மாதங்களுக்கு முன் இராணுவப் புரட்சி செய்து, மன்னரை நாடு கடத்தி, அரசாங்கத்தைக் கைப்பற்றிய எகிப்து நாட்டின் இராணுவ வீரர் ஜெனரல் முஹம்மது நஜீப், கூடிய விரைவில் நாட்டிலே ஒழுங்கான ஜனநாயக ஆட்சி நடைபெற வேண்டுமென்றுதான் அப்போது விரும்பினார். ஆனால் அதற்கு ஏற்ற சூழ்நிலையும் மாறுதலும் நாட்டிலே இன்னும் ஏற்படவில்லை. ஜெனரல் முஹம்மது நஜீப் இன்று எகிப்து நாட்டின் சர்வாதிகாரியைப் போல் விளங்குகிறார்; மக்களின் மாவீரனாகத் திகழ்கிறார்.

மன்னர் பாரூக்கை நாடு கடத்தி, அரசாங்கத்தைக் கைப்பற்றிக் கொண்டவுடன், அரசியல் கட்சிகளைத் தூய்மைப்படுத்த அவர் விரும்பினார். விரும்பத்தகாத தலைவர்களை மேற்படி கட்சிகளிலிருந்து விலக்கிவிட வேண்டுமென்று உத்திரவிட்டார். அரசரின் ஆட்சியின்போது அவர்கள் அநியாயமாக சம்பாதித்த சொத்துக்களையெல்லாம் பறிமுதல் செய்தார். இறுதியில் அரசியல் கட்சிகளையே அடியோடு அழித்து விட்டார். இத்தகைய நடவடிக்கைகளால் பாதிக்கப்பட்டவர்களிற் சிலர், நஜீபின் ஆட்சியைக் கவிழ்க்கவும், அரசாங்கத்தைக் கைப்பற்றவும் சென்ற மாதம் சதியாலோசனை செய்தனர். இச் சதித்திட்டத்தை ஜெனரல் நஜீப் உடனடியாகக் கண்டுபிடித்து, 25 இராணுவ உயர்தர அதிகாரிகளைக் கைது செய்திருக்கின்றார். இதன் பயனாக இன்னும் 3 வருட காலத்துக்கு முறையான அரசியல் ஜனநாயக ஆட்சியை ஒத்தி வைத்திருப்பதாக ஜெனரல் முஹம்மது நஜீப் அறிவித்திருக்கின்றார்.

இன்னும் 3 ஆண்டுகள் வரையில் எகிப்து நாட்டிலே நஜீபின் ஆட்சிதான் நடைபெறுமென்று அறிவிக்கப்படும்போது நமக்கு வியப்பாயிருக்கிறது. ஆனால் நஜீபின் ஆட்சி நல்ல ஆட்சியாயிருந்தால், ஏன் அது நீடித்து நடைபெறக் கூடாது?

நாட்டு மக்களும் இராணுவத்தினரும் அவரிடம் கொண்டுள்ள நம்பிக்கையும் விசுவாசமுந்தான் அவருடைய செல்வாக்கிற்குக் காரணம் என்பதில் சந்தேகமில்லை. இராணுவத்திலுள்ள இளம் வயதுடைய உயர்தர உத்தியோகஸ்தர்கள் அனைவரும் ஜெனரல் நஜீபைத் தங்களின் தந்தையைப்போல் மரியாதையுடன் நடத்துகின்றனர். ஆனால் அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் கருத்தை ஒளிக்காமல் வெளியிடுகின்றனர். நஜீப் தமது விருப்பம்போல் எந்த முக்கிய நடவடிக்கையும் எடுப்பதில்லை. உண்மையில் அவரிடம் ஒரு சர்வாதிகாரியின் குணதிசயங்கள் இருப்பதாக சொல்லமுடியாது. நாட்டுப் பொது மக்களுடன் நெருங்கிப் பழகுகிறார். நாடு முழுதும் சுற்றிச் சுற்றி வந்து மக்களின் கூட்டங்களில் கலந்து கொள்ளுகிறார். ஒரு குறிப்பிட்ட நேரத்தில குறித்த இடத்தில அவரை யாரும் கண்டுபிடிக்க முடியாது. ஒரு நாள் காலையில் இவரைக் காண்பதற்காகப் புறப்பட்டுச்சென்ற இராணுவ அதிகாரிகள் சிலர் கெய்ரோ முழுதும் தேடிக் கொண்டு அலைய வேண்டியதாகிவிட்டது. கடைசியில் ஒரு கிறிஸ்துவ அனுதைக் குழந்தைகளின் விடுதியில் அவர் வீற்றிருந்ததைக் கண்டார்கள். அடுத்த நிமிஷம் அவர் ஒரு காரிலே ஏறி சூடானைப்பற்றிப் பேசிக் கொண்டு சென்றார். பிறகு, சூயெஸ் கால்வாய்ப்பிரச்னையைப் பற்றிய விவாதத்தில் கலந்து கொண்டார். அதே சமயத்தில் பக்கத்து அறையில் அமெரிக்கப் பெண்களின் சமூக ஊழியர் சங்கத் தலைவியொருவர் நஜீபுடன் பேட்டி காண்பதற்காகக் காத்திருக்கின்றார்!

இவ்வளவு தூரம் நாட்டுப் பொது மக்களுடன் நெருங்கிப் பழகும் ஒரு இராணுவ வீரரை சர்வாதிகாரி என்று சொல்ல முடியுமா? நிச்சயமாக அவர் ஒரு சர்வாதிகாரியல்ல. மக்களின் தலைவன்; மனித சமூகத் தொண்டன்; ஏகாதிபத்தியத்தின் எதிரி; சுரண்டும் கூட்டத்தைச் சூறையாடவந்த வீர சிங்கம்; ஏழைக்கு வாழ்வளிக்க வந்த ஏந்தல்; எகிப்தின் விடுதலை வீரன். எகிப்தின் மண்ணிலே அன்னிய நாட்டுப் போர் வீரன் ஒருவன் கூட இருக்கக்கூடாது என்று அவர் வீரமுழக்கம் செய்கிறார். "பிரிட்டிஷ் படைகள் சூயெஸ் கால்வாயிலிருந்து நிபந்தனையன்றி வெளியேறவேண்டும். இல்லாவிட்டால் பலவந்தமாக வெளியேற்றுவோம்" என்று வீர உரை கூறுகின்ற விடுதலை இயக்கத்தை நஜீப் இன்று தலைமை வகித்து நடத்தி வருகின்றார்.

ஆங்கிலேயர்கள் இச் சந்தர்ப்பத்தை அறிவு நுட்பத்துடன் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். நஜீபைப் போன்ற நல்ல மனிதர்கள் இனி எகிப்திலே தோன்றுவார்கள் என்று எதிர்பார்க்கமுடியாது. "இந்த நல்ல சந்தர்ப்பத்தை நழுவவிட்டால் நமக்கு இன்னும் பெரிய நாச காலமே காத்திருக்கிறது" என்று ஒரு பிரபல ஆங்கில எழுத்தாளர் கூறுகின்றார். சர்ச்சிலின் தலைமையில் இயங்கும் இன்றைய பிரிட்டிஷ் அரசாங்கம், சரியான காரியத்தைச் சரியான காலத்தில் செய்யப்போகிறதா, இல்லையா வென்பதை இன்னும் சில மாதங்களில் உலகம் தெரிந்து கொண்டுவிடும். நஜீபின் விடுதலை இயக்கம் விரைவில் வெற்றி பெற்று, எகிப்து நாடு பொருளாதாரத்திலும், பிற துறைகளிலும் முன்னேறி எழிலுடன் விளங்க வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறோம். வாழ்க நம் விடுதலை வீரர் முஹம்மது நஜீப்!

### கேள்வி—பதில்

இந்த இதழின் கேள்வி—பதில்களில் அன்பளிப்புப் பெற்றவர்கள் :

1. எஸ். எஸ். ஹமீது, விருதுநகர்.
2. K. A. Z ஆபிதீன், கோலாலம்பூர்.
3. M. K. முஹம்மது நய்னு முத்துப்பேட்டை.


# குணத்தில் மேலானது



# L. G.

## எல். ஜி.

மார்க்கை கவனித்து வாங்கவும்



லால்ஜிகோது & கம்பெனி

சௌகார்பேட்டை — சென்னை.

# திருக் குர்ஆனும் திருநபியும்...

ஆ. கா. அ. அப்துஸ் ஸமது

"எவரேனும் (பிறர் செய்த தீங்கைப்) பொறுத்துக்கொண்டு மன்னித்துவிட்டால் நிச்சயமாக அது மிக்க வீரம் பொருந்திய காரியமாகும். (அல்குர்ஆன்—அத் : 42 : வச : 43)

தனக்குத் தீங்கிழைத்தவனுக்குப் பதில் தீமை இழைப்பதை மனித சுபாவம் என்று கருதுவது உலக இயல்பு. தீங்கிழைக்கப்பட்டவன் தீங்கிழைத்தவனைப் பழி தீர்க்க நாமும் உதவி செய்கிறோம். அதைப் புனிதமாகக் கூட கருதுகிறோம். அடிக்குப் பதில் அடி கொடுப்பதில் மனிதன் இன்பம் காண்கிறான்.

மூஸா நபி அவர்களுக்கு அருளப் பெற்றிருந்த தவ்றாத் வேதத்தில், "உயிருக்கு உயிர், கண்ணுக்குக் கண், மூக்குக்கு மூக்கு, காதுக்குக் காது, பல்லுக்குப் பல், காயத்திற்கும் (காயமாக) நிச்சயமாகப் பழி வாங்கப்படும்" என விதித்திருந்ததாக இறைவனே திருக்குர்ஆனில் கூறுகின்றான்.

ஆனால், "மன்னிக்கும் தன்மையே மனிதனின் சிறந்த பண்பு" என்ற கருத்தை திருக்குர்ஆன் பல இடங்களிலே வலியுறுத்திப் பேசுகிறது.

மனித இனத்தினிடையே அன்பு பாராட்டுமாறு எல்லோருந்தான் சொல்லியிருக்கிறார்கள். "விரோதியையும் நேசி!" என்ற ஏசுநாதரின் மொழியைக் கண்டு வியந்து வாழ்த்துகிறோம்.

"இன்னா செய்தாரை ஒறுத்தல்
—அவர் நாண
நன்னயஞ் செய்துவிடல்"

என்ற வள்ளுவன் குறள் நம் கருத்தைக் கவருகிறது. இவற்றைத் தம் வாழ்வின் வழியாகக் கொண்டவர் எத்தனைப் பேர்.?

'வீரம்' என்றால் என்ன என்பதுபற்றிப் பலர் பலவிதமாகக் கூறியிருக்கின்றனர். திருக்குர்ஆனின் கருத்துப்படி ஒருவனுக்குத் தீங்கிழைத்தவனைப் பழி வாங்க வாய்ப்பும் வசதியும் இருக்கும்போது, பழிக்குப் பழி வாங்காது, தீங்கைப் பொறுத்து மன்னிக்கும் தன்மையே வீரம் எனப்படும். இத்தகைய வீரத்துவம் பெருமானாரிடத்திலே பூரணத்துவம் பெற்றிருந்தது.

"உங்களுக்குத் தீங்கிழைத்தவரையும் நேசியுங்கள்" என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள். இதற்குரிய அரிய விளக்கமாகவே பெருமானாரின் உயரிய வாழ்வு இருப்பதைக் காண்கிறோம்.

இஸ்லாத்தையே 'ஒழித்துக்கட்ட' வேண்டுமென்ற நோக்குடன் 'பத்ரு' களத்திலே போரிட்ட நிராகரிப்போரில் (இஸ்லாத்தின் எதிரிகள்) 72 பேர் முஸ்லிம்களால் சிறை பிடிக்கப்பட்டனர். அவர்களில் 70 பேர்களை பெருமானார் அவர்கள் விடுதலை செய்துவிட்டார்கள்.

'உஹுத்' யுத்தம் நெருக்கடியான நிலையை அடைந்த நேரம் 'இப்னு காமில்', இப்னு ஷபாப்' 'உத்பா' போன்றோர் வீசிய கூரிய கவண் கற்களால் பெருமானாரின் நெற்றியும், கன்னமும், தோளும் படுகாயமடைந்தன. முன்னம் ஒன்று உடைந்து விழ்ந்தது. கவசத்தின் வளையங்கள் கன்னத்தில் ஆழப் பதிந்தன. பாய்ந்து வந்த அம்பு முகத்தில் குத்திற்று. குத்திட்டு நின்ற அம்புடன் குழியில் வீழ்ந்தார்கள் நபிகள் நாயகம்! சற்று நேரத்தில் யுத்தத்தின் போக்கு மாறிற்று. ஓங்கியிருந்த குறைஷிக் காபிர்களின் கை ஒடுங்கிற்று. பெருமானாரின் கன்னத்தில் பதிந்திருந்த கவச வளையங்களைப் பிடுங்கும் முயற்சியில் ஹஸ்ரத் அபூ உபைதா (ரலி) இரு பற்களை இழந்தார்கள். காயத்திலிருந்து குருதி பீறிட்டடித்தது. உற்ற தோழர்களால் காணச் சகிக்காத காட்சி அது. பெருமானாரின் திருமேனி "சதைப்புண்டு தவிப்பெய்தி பன்னரிய பல பாடுபடும்" அவ் வேளையிலே ஸஹாபாக்கள் கேட்டார்கள்: "யா ரஸூலல்லாஹ், உங்கள் பிரார்த்தனையை அங்கீகரிப்பதாக இறைவன் உறுதி பளித்திருக்கிறான் அல்லவா?"

"ஆம்!" என்றார்கள் பெருமானார்.

அவ்வாறாயின், இந்த நிராகரிப்போரைச் சபிக்கக்கூடாதா? என்று கேட்டார்கள் தோழர்கள்.

"நான் சபிப்பதற்காக அனுப்பப்படவில்லை; (அல்லாஹ்வின் வழியில்) அவர்களை அழைக்கவும், அவர்கள்மீது கருணை காட்டவுமே அனுப்பப் பெற்றுள்ளேன்" என்று பதில் கூறிய பெருமானார், "என் இறைவனே! என்னுடைய மக்களுக்கு நீ நேர்வழி காட்டுவாயாக! (ஏனெனில்) அவர்கள் அறியாதவர்களாக இருக்கின்றனர்" என பிரார்த்தனையும் செய்தார்கள்.

மக்க நகர் வெற்றிக்குப் பின் மக்கத்துக் குறைஷிகள் கைதிகளாக நபிபெருமானார் முன் நிறுத்தப்பட்டனர். அவர்கள்மீது எத்தகைய முடிவும் கூற பூரண அதிகாரம் உடையவர்களாக பெருமானார் இருந்தனர்.

சிறை பிடிக்கப்பட்டு நிற்கக் கூடியவர்கள், பிறந்த நாட்டிலே அமைதியாக வாழவிடாது பெருமானாரை விரட்டியவர்கள்; கல்

துரை புகன்றதற்காகக் கல்லடி தந்த கயவர்கள்; பெருமானார் செல்லும் பாதைகளில்கூட கற்களையும் முட்களையும் பரப்பிவைத்த பாதகர்கள். அந்தக் கூட்டத்திலே, பெருமானார் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்றபோது, அவர்களைப் பின்தொடர்ந்து சென்று பலதடவைகளிலும் கொல்ல முயற்சித்த ஸிறுக்கா, பெருமானாரின் சிறிய தந்தை ஹஸ்ரத் ஹம்ஸா (ரலி) அவர்களை 'உஹது' களத்திலே கொன்ற வஹ்ஷி, ஹஸ்ரத் ஹம்ஸாவின் உடலைக் கிழி ஈரலைத் தனியே எடுத்துக் கடித்துச் சுவைத்துத் துப்பிய ஹிந்தா, சூல் கொண்டிருந்த பெருமானாரின் மகள் ஜெய்னபின் வயிற்றில ஈட்டியால் குத்தி அவர்களின் கருச் சிதைவுக்கும் மரணத்திற்கும் காரணமாயிருந்த ஹப்பார் ஆகிய வன்னெஞ்சர்களும் நிறைந்திருந்தனர். அவர்களை நோக்கிப் பெருமானார் சொன்னார்கள்.

"இன்றைய தினம் உங்கள்மீது (எத்தகைய) குற்றச்சாட்டும் இல்லை... அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!"

இத்தகைய ஒரு பெருந்தன்மையை, பொது மன்னிப்பை உலக வரலாற்றின் எப் பகுதியிலும் எவரும் காண முடியாது.

பெருமானாரின் வார்த்தைகளை சிறிது நன்கு கவனிக்க வேண்டும். தம் உயிருக்கே உலை வைக்கக் கருதிய பாதவர்களை — தம் உயிரினு மினிய பலரைக் கொன்று குவித்த கொலைஞர்களை — அவர்கள் மீது எத்தகைய குற்றச்சாட்டும் இல்லை' என்று கூறியதுடன் பெருமானார் இருந்துவிடவில்லை. தாம் மன்னித்தாலும் இறைவனிடத்திலே அவர்களுக்கு மன்னிப்புக் கிடைக்குமோ? என்னவோ? என பெருமானார் எண்ணியிருந்திருக்கலாம். எனவே, "இறைவன் உங்களை மன்னிப்பானாக!" என்ற பிரார்த்தனையையும் செய்தார்கள்.

"விரோதியையும் நேசி!" என்ற ஏசு நாதரின் மொழியை இங்கே செயலில் காண்கிறோம்.

"தமக்குத் தீங்கிழைத்தவரைத் தண்டிப்பதென்பது, அவர்கள் வெட்கும்படி அவர்களுக்கு நன்மைசெய்து—அவர்களுக்கு நன்மை செய்ததையும்—அவர்கள் தீமை செய்ததையும் மறந்து விடுதல்"—என்று

"இன்னா செய்தாரை ஒறுத்தல் —அவர் நாண
நன்னயஞ் செய்து விடல்!"

என்ற குறளுக்கு உரை காண்கிறார்கள். பெருமானாரின் வாழ்வில்தான் இந்தக் குறளின் உரை நிறைவெய்தி யிருப்பதைக் காண்கிறோம்.

"உங்களுக்குத் தீங்கிழைப்போரை மன்னியுங்கள். உங்களைப் பிரிபவரை—ஒன்றுபடுத்துங்கள். இன்னா செய்தாருக்கும் நன்னயஞ் செய்யுங்கள், உங்களுக்கு விரோதமாக இருப்பினும் உண்மையே சொல்க" என பெருமானாரின் வாளில் பொறிக்கப்பட்டிருந்ததாக ஹதீஸில் காணப்படுகிறது.

"உங்களுக்குத் தீங்கிழைத்தவரைப் பொறுத்து மன்னிப்பது வீரச்செயல்' என்று திருக்குர்ஆன் குறிக்கிறது. இதையேதான் பெருமானார் அவர்கள் வீரத்தின் சின்னமான தம் வாளில் பொறித்திருந்தார்கள் போலும்!

# பாலைவனத் திருடன்!

மௌல்வி முஹம்மது யாகூப் கான்

*

முன்னொரு காலத்தில் அஹ்மது என்ற பெயருள்ள ஒருவர் அராபியப் பாலைவனத்தின் நடுவிலே காணப்பட்ட பசும்புற்பூங்கா வொன்றில் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு குலத்தவரின் தலைவராயிருந்தாராதலின், அவர் அந்நாட்டு மக்களால் "ஷேய்க்" என்றே அழைக்கப்பட்டுவந்தார். அவர் மிக்க நல்லவர்; அவரது புகழ் பாரெங்கும் பரவி நின்றது. வழிப் போக்கர்களுக்கு அவரது இல்லம் உணவும் உறைவிடமும் தந்துதவியது. அந்தகர்களுக்கும் அங்கவீனர்களுக்கும் அவர் தன்னாலியன்ற உதவியும் ஆதரவும் அளித்து வந்தார். வயது முதிர்ந்த தாய்மார்களுக்குக் கிணற்றிலிருந்து தண்ணீர் இழுத்துக்கொடுப்பார்; எப்பொழுது, எங்கு யார் அவரது உதவியை நாடினும், அவர்களுக்கு ஓடோடியுஞ் சென்று அவர் உதவிபுரியத் தயாராயி ருந்து வந்தார். அவர் ஒருபோதும் ஒருவிதமான பொய் மொழியும் புகன்றதில்லை.

ஷேய்க் அவர்களிடம் ஓர் உயர்தரமான அசல் அராபியக் குதிரை இருந்தது. அரப் நாடு முழுதும் அவ்வழகிய குதிரையைப்பற்றிப் பேசாதாரில்லை. அந்நாட்டின் நாலுபகுதிகளின்றும் அவ் வெழில் மிக்க குதிரையைக் காண மக்கள் திரள்திரளாய் வந்து போய்க்கொண்டிருந்தனர். குதிரைகளின் மீது அராபியர்கள் அபரிமிதமான அன்பு பாராட்டிவந்தனர். அவர்கள் அடிக்கடி குதிரைக் காட்சிகள் நடத்துவர். இத்தகைய காட்சிகளின் போது ஷேய்கின் ஒப்பற்ற குதிரையின் வீர தீர சாகசங்களைக் கண்டு களிப்பதற்கென்றே நெடுந்தூரத்திலிருந்து பெருங் கூட்டம் திரண்டு வருவது வழக்கம். இக் குதிரையைப் பெருந் தொகை கொடுத்து விலைக்குப்

> முற்கால முஸ்லிம்களின் சரித்திரத்திலே பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படவேண்டிய இஸ்லாமியப் பண்பை விளக்கும் இணையற்ற நிகழ்ச்சிகள் எத்தனையோ இடம் பெற்றுள்ளன. அவைகளைப் பற்றி அறிஞர் யாகூப்கான் தமது அழகிய ஆங்கில நடையில் அநேக கட்டுரைகள் எழுதியிருக்கின்றார். இவைகளைத்தான் "GOLDEN DEEDS OF ISLAM" என்று அவர் கூறுகிறார். இத்தகைய இணையற்ற இஸ்லாமிய போதனைகளை நமது இளைஞர்களும் சிறுவர் சிறுமிகளும் அறிந்து அதன்படி ஒழுகுவார்களாயின், அவர்களின் வாழ்வும் இஸ்லாத்தைப் போலவே உன்னதம் பெற்று உயிர்த்துடிப்புள்ளதாக விளங்கு மென்பதில் ஐயமில்லை. இதுபோன்ற மற்றும் பல கட்டுரைகள் இதில் தொடர்ந்து வெளியிடப்படும்.

பெறுவதற்கும் பெருந் தனிகர் பலர் முன்வந்தனர். ஆனால் அதனை விட்டுப் பிரிய ஷேய்க் விரும்பினாரில்லை.

ஷேய்கின் குதிரை அக்காலத்தில் பெற்றிருந்த பெரும்புகழே போன்று, அப்பகுதிகளில் லேலா என்ற பெயர் தாங்கிய ஒரு அழகிய பெண்மணி அராபிய நாடோடி வகுப்பினரிடையே தோன்றிப் புகழுடன் விளங்கினாள். அக் குலத்தவரிடையே அவளது பேரழகு பற்றியே பெரும் பேச்சாயிருந்து வந்தது. அவ்வாரணங்கை மணமுடித்துக்கொள்ள முஸ்லிம் இளைஞர்கள் பலர் போட்டியிட்டனர். ஷேய்கைப்பற்றியும் லேலா அதிகம் கேள்வியுற்றிருந்தாள். எவ்விதமேனும அக் குதிரையைத் தனக்கென அடைந்தே தீருவதென அவள் முடிவு செய்துகொண்டாள்; குதிரையை விற்பதில்லை யென்ற ஷேய்கின் பிடிவாதத்தையுந் தெரிந்துகொண்டாள். எனவே, தன்னை மணமுடித்துக்கொள்ள விழைவோர் எவராயிருப்பினும் அந்த ஷேய்கின் குதிரையைக் கொணர்ந்து கொடுத்துவிட வேண்டுமென்ற கடும் நிபந்தனையை விதித்தாள்.

அப் பெண்ணரசியை விரும்பி நின்ற எண்ணற்ற காதலர்களில் ஒருவரான காஸிம் என்ற ஊக்கமும் உற்சாகமும் நிறைந்த வாலிபர் ஒருவர் தனது அதிருஷ்டத்தைப பரிசோதனை புரியப்புறப்பட்டார். பாலைவனப் பிரதேசத்தில் நெடிய பிரயாணஞ் செய்து ஷேய்கின் வாசஸ்தலத்தைக் காஸிம் அடைந்தார். வழக்கம் போலவே ஷேய்க் அவ்வாலிவரை வரவேற்று உபசரித்து அன்பொழுகப் பேசினார். ஆனால் குதிரைக்குப் பெருந் தொகை கொடுப்பதாய்க் காஸிம் கூறியபோதினும், அவருக்குக் குதிரையை விற்பனை செய்ய ஷேய்க் மறுத்துவிட்டார். இவ்வண்ணம் நேரிய முறையில் அக் குதிரையைப் பெறுவதில் ஏமாற்றமடைந்த காஸிம், ஒரு சூழ்ச்சியின் மூலம் அதனை அடைய முடிவுசெய்துகொண்டார். காதற் களத்திலும் போர்க்களத்திலும் மேற்கொள்ளப்பெறும் நடவடிக்கைகள் யாவும் நேர்மையானவையே என்று அவர் தனக்குள் கூறிக்கொண்டார்.

மாலை நேரங்களில் தனது குதிரையின் மீதேறிச் சற்று தூரம் சவாரி செய்துவிட்டுச் சூரியன் மறைந்ததும் வீடு திருமபுவது அந்த ஷேய்கின் தினசரிப் பழக்க வழக்கங்களிலொன்றாக இருந்து வந்தது. இவ் வண்ணம் ஒரு தினம் அவர் தனது வழக்கமான குதிரைச் சவாரியினின்று திரும்பி வருதுகொண்டிருந்தபோது பாதையோரத்தில மனிதனொருவன் விழுந்து கிடக்கக்கண்டார். அவன் ஒரு போர்வையைத் தன் மீது போர்த்திக் கொண்டு, ஏதோ உடல் நோவினால் ஏற்பட்ட உபத்திரவம் காரணமாய முக்கிக்கொண்டும் முனகிக் கொண்டுமிருந்தான். பரிதாபகாமான அக் காட்சியைக் கண்ட ஷேய்க் தமது குதிரையை நிறுத்தினார்; தரையிற் கிடந்த மனிதனை நோக்கி, "உமக்கென்ன நேர்ந்தது?" எனப் பரிவுடன் வினவினார்.

"நான் நோய்வாய்ப்பட்டுள்ளேன்; என்மீது இரங்கி, என்னை அதோ அருகிற் காணப்படும் கிராமத்திற்கு எடுத்துச் சென்று அங்கே விட்டுவிடுங்கள்" என ஷேய்கை அம்மனிதன் கேட்டுக்கொண்டான்.

சட்டென ஷேய்க் தனது குதிரையினின்றும் இறங்கி அம் மனிதனைத் தூக்கிக் குதிரையின் மீதேற்றிவைத்துக் குதிரையின் கடிவாளத்தைத் தானே பிடித்துக்கொண்டு நடந்து சென்றார். இவ்விதம் சுமார் பத்துப் பன்னிரண்டு அடி தூரம் குதிரை சென்றவுடன் குதிரைமீதிருந்த மனிதன் ஷேய்கை நோக்கி, "தயைசெய்து சற்று நில்லுங்கள்; எனது போர்வை அங்கே வீழ்ந்துகிடக்கிறது. அன்புகூர்ந்து அதனை எடுத்துவாருங்கள்" எனக் கேட்டுக்கொண்டார். சூதுவாது எதுமறியாத ஷேய்க்கும் கடிவாளக் கயிற்றை விட்டுவிட்டுப் போர்வையை எடுக்கத் திரும்பிச் சென்றார். இதுவே சமயமெனக் குதிரை மீதிருந்த மனிதன் கடிவாளக் கயிற்றைப்பற்றிக் குதிரையை விரட்டத் தொடங்கினான். இதைக் கண்ணுற்ற ஷேய்க் தாம் நயவஞ்சக முறையில் ஏமாற்றப் பட்டதை யுணர்ந்தார். குதிரைமீதிருந்த காஸிம் திரும்பி நோக்கி, "ஷேய்க் அவர்களே! சென்று வருகிறேன்! விடை தாருங்கள்! நீர் எனக்கு நேரிய முறையில் விற்பனை செய்ய மறுத்த குதிரையை உம்மிடமிருந்து நான் பெற்றுக்கொண்ட வகையைத் தெரிந்துகொண்டீரா?" என எளனமும் எக்களிப்பும் நிறைந்த சொற்களில் கூறினார்.

"ஒரே ஒரு வார்த்தை! இதை மட்டும் நீர் செவிமடுத்துச் சென்றுவிடும்" என ஷேய்க் பதிலளித்தார்.

"சரி; அப்படியே, அங்கிருந்தவாறே அதனைக் கூறுவீராக!"

"ஒரே ஒரு வார்த்தை! இதை மட்டும் நீர் எனக்கு வாக்களித்தால் நான் எனது அருமைக் குதிரையை இழப்பது பற்றிச் சிறிதும் வருந்த மாட்டேன். எவரேனும் உம்மிடம் வந்து, எப்படி இக் குதிரையை நீர் என்னிடமிருந்து அடைந்தீர் எனக்கேட்டால், என்னை ஏமாற்றி இக்குதிரையை என்னிடமிருந்து அபகரித்ததாகக் கூறிக் கொள்ளாதீர்! இவ்விதம் நீர் என்னை ஏமாற்றி அபகரித்தீர் எனக் கூறுவது இஸ்லாத்தினுடையவும் முஸ்லிம்களினுடையவும் புனிதத் தன்மைக்குக் களங்க முண்டு பண்ணுவதாகும். எவ்விதமான இழிசெயலும் கபடக் காரியங்களும் இஸ்லாத்திற்கும் முஸ்லிம்களுக்கும் ஏற்றதல்ல. இஸ்லாத்தினுடையவும் முஸ்லிம்களினுடையவும் இத்தகைய பெருமைக்கு நீர் இழுக்கையுண்டுபண்ணுதல் கூடாது."

காதலாற் கண் மறையப் பெற்றிருந்த போதிலும், ஷேய்கின் இவ்வுருக்கமான வேண்டுகோள் காஸிமின் உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து அவரது அக்கிரம எண்ணத்தை அடியோடு அகற்றிவிட்டது: அக்கணமே அங்கேயே காஸிம் குதிரையை விட்டுக் கீழே இறங்கினர்.

"இதோ! தங்களின் பிரியக் குதிரை! பெற்றுக் கொள்ளுங்கள்! இஸ்லாமியப் புதல்வனுகிய யான் இஸ்லாத்தின் கற்பெயருக்குச் சிறிதேனும் மாசு விளைவிக்கத்தக்க காரியம் எதுவும் செய்ய மாட்டேன்," எனக் கூறிக் கொண்டே ஷேய்கினிடம் காஸிம் அந்தக் குதிரையின் கடிவாளக் கயிற்றைக் கொடுத்துச் சென்றார்.

—x—


முஸ்லிம் முரசு

4-ம் ஆண்டு பைண்டு வால்யூம்

(ஈத், மீலாத் மலர்களுடன்)

(1951 ஜூலை முதல், 1952 ஜூன் வரை 12 இதழ்கள்)

இதில் உள்ள முக்கிய விஷயங்கள் :

துருக்கியைப்பார்!
இஸ்லாத்தின் கோட்பாடுகள்
அப்துல்காதிர் ஜீலானி (வாழ்க்கை வரலாறு)
"கீழ்நாடுகளின் நெப்போலியன்" முஹம்மது அலீ
சோவியத் ருஷ்யாவில் முஸ்லிம்கள்
உலக முஸ்லிம் மாநாட்டில் லியாகத் அலீகான் சொற்பொழிவு
டாக்டர் முஹம்மது முஸத்திக்
மத்தியக் கிழக்கில் நான் கண்டதும் கேட்டதும் (டாக்டர் காளிதாஸ் நாக்)
பாலைவனப் பேரரசர்
என்மகன் லியாகத் (பேகம் மஹ்மூதா)
காயிதே ஆஸம் ஜின்னு (திருமதி சரோஜினி நாயுடு)
லியாகத் அலீகான் (வாழ்க்கை வரலாறும், வீரமரணம் எய்திய செய்திகளும் விசேஷ கட்டுரைகளும்)
இலங்கையில் இஸ்லாம்
இஸ்லாமிய தலைநகர் இஸ்தம்பல்
சுதந்தர லிபியா
மௌலானா முஹம்மது அலீ (வாழ்க்கை வரலாறு)
பாக். பிரதமர் காஜா நஜீமுத்தீன்
முஹம்மது ஷா ஆகாகான்
துனீஷியாவில் சுதந்தரப்போர்
"நீண்டகாலம் வாழ்வது எப்படி"?
அல்லாமா இக்பாலின் அறிவுரைகள்
திப்புசுல்தானின் வீர வரலாறு
கம்யூனிஸ்ட் சீனுவில் முஸ்லிம்கள்
காஷ்மீர் பிரச்னை (பி. என். ராவ், ஜபருல்லாகான்)

விலை ரூ. 5—0—0 (வி. பி. தபால் செலவு தனி —மலேயாவுக்கு முன் பணம் தேவை)

மானேஜர்,

"முஸ்லிம் முரசு"

132, பிராட்வே :: சென்னை-1.


# காலவெள்ளம்

மருதாம்

## ஜுனைத்

பொருனையின் வெள்ளி நுரைக்கும் தெள்ளிய நீரின் அழகோட்டம் என் உள்ளத்தை வெகுவாக ஈர்த்தது. பொதிகைத் தென்றல் அள்ளியெடுத்து வரும் காட்டு மலர்களின் நறுமணமும், நதியின் குளிர்ச்சியும் சிறிது சுதாரிப்பை ஊட்டின. அந்த இயற்கையின் காட்சியிலே, உள்ளத்து உணர்ச்சிகள் ஒடுங்கி, இதயமெல்லாம் ஒன்றித்து விட்டது. பாபநாசத்திலுள்ள முஸ்லிம் சத்திரத்திலே என் குடும்பத்தினரை தங்கவைத்து விட்டு, அதற்கு மேற்கே அமைந்த கல்லணையில் நீராடுவதற்காக வந்த நான், இயற்கையின் அழகுக் காட்சியில் லயித்து, தன்னை மறந்து நின்றேன். அப்பொழுதுதான் என் பெயரைச் சொல்லிக் கூப்பிடும் குரல் கேட்டது.

'ஜுனைத்'

மறுபடியும் அந்த அழைப்பை எடுத்து வந்து காதில் ஒதிச் சென்றது, தென்றல். அதைக் கேட்டுத் திடுக்கிட்டவனாகக் குரல் வந்த திசையை நோக்கி முகம் திருப்பினேன். எதிரே ஒரு தம்பதியினர் வந்து கொண்டிருந்தனர். நதியின் கரையருகே ஓடோடிச் செல்லும் தன் குழந்தையின் பெயர் சொல்லிக் கூப்பிட்டாள் அந்தப் பெண்மணி. அத்தம்பதியினர் மிகவும் உல்லாசமாக உரையாடிக் கொண்டு வந்தனர். அவர்கள் என்னைக் கவனித்ததாகவே தெரியவில்லை. சில நிமிடங்களில் அவர்களிருவரும் என்னருகிலே நெருங்கி விட்டனர். அவள் மறுபடியும் முன்னேடிச் செல்லும் தன் குழந்தையை 'ஜுனைத்' என்றழைத்தாள். அவர்கள் என்னை மிகவும் நெருங்கியதும், நான் அவளை நோக்கினேன்; அவள் என்னை நோக்கினாள். எங்கள் பார்வையின் சந்திப்பு இரண்டொரு கணங்களே நீடித்தன! என்னைப் பார்த்ததும், அவள் கன்னங்கள், அறுத்து வைத்த கொய்யாக் கனிபோலச் சிவந்தன. அவள் தலை குனிந்தவாறே முக்காட்டை இழுத்து விட்டுக் கொண்டு விரைந்து சென்றாள். அவளைக் கண்டதும் என் மனம் பெரிதும் குழப்பமடைந்தது. சிறிது நேரத்திற்கு முன்னர் என் உள்ளத்தில் நிலவிய சாந்தியும், அமைதியும் பிரிந்து சென்றன.

இறந்த காலம் மனிதரின் சிந்தனைக் கோட்டையிலே சிறைப்படுத்தப்பட்டுள்ளது. நினைவெனும் அக்கோட்டைக் கதவைத் திறந்து விட்டால், கடந்த காலம் திரும்பவும் உயிர் பெற்று நடமாடத் தொடங்கி விடுகிறது. அம்மாயக் காட்சிகள் தான் எவ்வளவு இன்பமானவை; துன்பமானவை; அற்புதமானவையுங்கூட! ஜரீனாவின் அழகு ஒன்றே, அவளை வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக்கொள்ளப் போதுமானது. அவள் என் ஆசையையும், அன்பையும் வென்றவள். என் இதயத்தையுங்கூட அவள் கண்களில் பிடித்துவைத்திருந்தாள். அதாவது, அவள் கண் சுழற்சியில் என் இதயம் பம்பரம் போல ஆடும். நாங்களிருவரும் சதிபதியினராக வாழ்க்கையைத்துவக்கியபோது ஆற்றின் பெருக்கு போன்ற இன்ப ஓட்டத்திலே நாங்கள் மிதந்ததென்னவோ




உண்மை. ஆனால் மனிதன் அழகு ஒன்றிலே மட்டும் திருப்தியும், அமைதியும் காண்பதில்லையே? காலம் செல்லச்செல்ல, எங்களுக்குள் சிறிது மனத்தாங்கல் வேர் விட்டது. அடிக்கடி சண்டைகளும், மோதல்களும் இளைத்தன. இல்லறம் என்பது இன்ப துகர்ச்சியிலே மட்டும் நிறைவுறுதில்லை என உணரவாரம்பித்தேன். இதற்கெல்லாம் காரணம், என் ஜரீனா வெறும் ஐம்பச்செடியாக, கண்களுக்கு வெறும் அழகு மலராக



மட்டும் விளங்குவதுதான் எம்மனதில் வெறுப்பூட்டியது. அவள் அழகோ சிறிதும் குறைவில்லைதான். ஆனால் அந்த அழகின், அழகியின் அருமையான வாரிசைக் காணவேண்டுமென்ற அவா என்னிடம் பெருக்கெடுத்தது. ஜரீனாவோ பிஞ்சுவிடும் மாதுளை மொக்காக இல்லை; வெறும் பொய்த்த மொக்காக விளங்கினாள். அந்த இல்லறப் பரிசைத் தாராத ஜரீனா எனக்குப் புளித்து விட்டதில் வியப்பில்லை. அவள் உயிரோவியம் என் உள்ளத்தில் மங்கலாகக் காட்சியளிக்கத் தொடங்கியது.

என் நண்பர்கள் வேறு என்னைக் கிண்டலுக்கும் நையாண்டிக்கும் இலக்காக்கினார்கள். என் தாயோ எனக்குத் திருமணமாகி, ஆண்டு ஆறு கழிந்தும், ஜரீனாவுக்குக் குழந்தை பிறக்கவில்லை என அறிந்து வேதனையுற்றாள். தன் பேரக் குழந்தைகளைக் காண அவளுக்கும் ஆசையிருக்காதா என்ன? இந்த நிலைமையினால் எனக்கும் ஜரீனாவுக்கு மிடையில் பிறந்த இடைவெளி நாளடைவில் விசால முற்றது. என் தாயாரும் எனக்கு மற்றொரு பெண் பார்க்கும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டாள். இதைத் தெரிந்து கொண்ட ஜரீனா, ஆத்திரம் தீர என்னை வையத் தொடங்கினாள். 'என் கணக்கைத் தீர்த்து விட்டு, வேறொருத்தியைக் கட்டிக் கொள்ளுங்கள்' என இரைந்தாள். இதைக் கேட்டு என் சினமும் எல்லை மீறியது. ஜரீனாவை வாழ்க்கைத் துணைவி என்ற பதத்திலிருந்து நீக்கிக் கொள்ள



ஊராண்மைக்காரர் துணையைப் பெற்றேன். அவளுக்குத் 'தலாக்' கொடுத்து விட்டேன். அன்று பிரிந்த ஜரீனாவை இன்றுதான் சந்தர்ப்ப வசமாகச் சந்தித்தேன். ஆனால் இப்பொழுது அவள் ஒரு குழந்தைக்குத் தாய்! அப்படியானால் ஆண் தன்பால் மறைந்திருக்கும் குறையை உணராது, வீணாகப் பெண் மீது பழியைப் போடுகிறானா?

## ஜரீனா

நானும் என் கணவரும் பொருனை நதிக்கரையை யொட்டி பேசிக் கொண்டே நடந்து வந்தோம். அப்பொழுது தான் சிறிதும் எதிர்பாராத முறையில் 'அவரை'க் காணும் சந்தர்ப்பம் நேரிட்டது. ஒருவர் மீது மற்றவர் பார்வை நிலைத்து நின்றதெல்லாம் ஒன்றிரண்டு விநாடிகள் தான். பிறகு என் கண்களும் தலையும் கவிழ்ந்தன; முக்காட்டை இழுத்துப் போட்டுக் கொண்டே விரைவாக நடக்கவாரம்பித்தேன். என் சிந்தனையில் புதையுண்டு கிடந்த பழைய நினைவுகள் என் உள்ளத்தில் அலை மோத ஆரம்பித்தன.

கண்ணுக்கினியவரும், அழகு பொருந்தியவருமாக விளங்கிய அந்த அயலூர் மாப்பிள்ளைக்கு என்னை மணஞ்செய்து கொடுத்தார்கள், என் பெற்றோர். அவரது அன்பும், ஆசையும் என் மீது நகைகளாகவும், பட்டாடைகளாகவும் உருவெடுத்து விளங்கின. இவ்வளவு நேசங் கொண்ட கணவர் கிடைத்து விட்டாரே என்று என் மகிழ்ச்சி எல்லையற்றுப் போயிற்று. எங்கள் வாழ்வு மிகவும் இன்பமாகவும், உல்லாசமாகவும் சென்று கொண்டிருந்தது.

பழகப் பழகப் பாலும் புளிக்குமாமே? அதுபோலவே எனக்கும் இந்த வாழ்வு கசந்துவிட்டது. எனவே அவரும் என் வெறுப்புக்கு இலக்கானார். என் மீது வசவுகளையும், குறைகளையும், சாடையாகவும், சமயங்களில் பட்டவர்த்தனமாகவும் எறிவார். அப்பொழுது என் மனம் அவரது சுடுசொற்களால் மிகவும் புண்பட்டது. எங்களுக்குள் புரையோடிய பூசலுக்கு மூல காரணம் நான் ஒரு குழந்தைக்குத் தாயாகாததுதான்! என்னை ஊர்ப் பெண்கள் 'மலடி' என்று இகழ்ந்து, என்னிடத்தில் தான் குறையைக் கண்டார்கள். "ஒரு பெண், குழந்தையின்றித் திருப்தியுறுவதில்லை. அவளுக்கு குழந்தை பிறக்கவில்லை எனில் அவள் சிடுசிடுப்பும், வெடுவெடுப்புமுடையவளாக மாறுகிறாள்" என்று எங்கோ படித்த ஞாபகம் எனக்கு வந்தது. இவ்விதமான காரணங்களால்தான் என்னவோ, அவர் மீது எனக்கு ஒரே வெறுப்பு ஏற்பட்டது.

இந்த வெறுப்பை மேலும் மேலும் விருத்தி செய்து, பெருகச் செய்தது வேறொரு நிகழ்ச்சி. அவர் மற்றொரு மணம் செய்யப் போவதாக ஊரெல்லாம் ஒரு வதந்தி உலவியது. இச் செய்தியின் பிறப்பிடம் அவரது தாயாரைத் தவிர வேறுயாராக இருக்க முடியும்? மாமியாரின் குத்தலான பேச்சுக்கும், ஏச்சுக்கும் இரையாகித் தவித்தது என் மனம். என்னைக் கல்யாணஞ் செய்ததற்காக அவரை வைதாள். அவளின் தலை நரைத்தும் ஆசை என்னவோ நரைக்கவில்லை. தன் பேரப்பிள்ளைகளைக் காணவேண்டுமென்ற ஓரே ஆசை அவளுக்குப் பெருகி நின்றது. ஆசைக்கு இளமை, முதுமை என்றபேதங்கிடையாது. காலத்திற்கேற்ற ஆசைகள் மனிதரிடத்தில் தோன்றுவது இயற்கை. இளமை யுள்ளம் காதலுக்காகத் தவிக்கிறது. பருவத் துடிப்பு ஓய்ந்ததும், தம்பதியினர் உள்ளங்கள் குழந்தைக்காக ஏங்குகின்றன. குழந்தை பிறந்ததும் அதன் திருமணத்தைக் காணத் துடிக்கிறது அந்த மனம். பிறகு பேரக் குழந்தையையே காண அவாவுகிறது. ஆசை மனித வாழ்வை இயக்கும் சக்தி! கடலலையைத் தடைப்படுத்த முடியாததுபோல, ஆசையையும் தடைப்படுத்த இயலாது.

இத்தகைய ஆசையால் என் வாழ்வையே நாசப்படுத்த முனைந்தாள் என் மாமியார். என் கணவர் மறுமணம் செய்துகொள்ள என் சம்மதம் அறியவந்தார். 'அவள் சம்மதம் எதற்கு? விருப்பமிருந்தால் இங்கிருக்கட்டும். இல்லையானால் அவள் வீட்டிற்குச் செல்லட்டும்' என்று அவர் தாய் இரைந்து கொட்டினாள். என் மனம் கொதித்துக்கொண்டிருந்தது. என் ஆத்திரம் பீறிட்டெழுந்தது. 'என் கணக்கைத் தீர்த்துவிட்டு...' என்று ஏதோ கூறினேன். எனக்குக் கூட அவ்வளவு தெளிவாக இப்பொழுது நினைவில்லை. மேற்கொண்டு நடந்தவைகளை விவரிப்பதில் பயனுமில்லை. இறுதியாக நாங்கள் பிரிந்துகொண்டோம்.

பிறகு எவ்வளவோ மாறுதல்கள் என் வாழ்க்கையில் நடைபெற்றன. வேறொருவருக்குச் சில காலம் கழித்து நான் வாழ்க்கைப்பட்டேன். எனக்கொரு ஆண்மகவும் பிறந்தது. பழைய பாசமோ, என்னவோ, என் குழந்தைக்கு 'ஜ[illegible]னத்' என்ற பெயரைச் சூட்டினேன். வீணாகவும், அநியாயமாகவும் என் மீது பழியைப் போட்டுக் கேவலப்படுத்தினார்களே, அவர்கள் என் குழந்தையைக் காணின் உண்மையை உணருவார்கள்; அக்குறை ஆணிடமும் உண்டு என்பதை அறிவார்கள். இவ்வாறே எண்ணிக்கொண்டு சத்திரத்தினுள் நுழைந்தேன்.

நாங்கள் தங்கியிருந்த அறைக்கு, இரண்டு அறைகள் தள்ளியிருந்த அறையொன்றில் அப்பொழுதுதான் ஒரு குடும்பம் வந்திறங்கியிருந்தது. என் மனமோ பழைய நினைவுகளால் சஞ்சல முற்றுக் கொண்டிருந்ததால், அவர்களைப் பற்றித் தெரிந்து கொள்ள முனையவில்லை. ஆனால் சிறிது நேரத்தில் யாரோ என் பெயர் சொல்லிக் கூப்பிடுவதுபோலக் கேட்டேன். என்

கண்வரோ என்று திரும்பி நோக்கினேன். இல்லை. புதிதாக வந்தவர் ஒருவர் 'ஜரீனு' என்று அழைத்துக் கொண்டிருந்தார். ஆம்...அவரேதான்! அவர் யாரை அழைக்கிறார்? என்னையா? இந்தக் கேள்விகள் என்மனத்தில் சுழிப்பதற்குள், அந்தப் புதிய குடும்பத்திலுள்ள ஒரு பெண் அவரிடம் ஏதோ கூறினாள்?. அவள் அவரது மனைவி என்பதைப் பின்னர் தெரிந்து கொண்டேன். அவர் சத்திரத்தின் பின்பக்கம் சென்றார். நானும் அறையின் ஜன்னல் வழியே மெல்ல எட்டிப்பார்த்தேன். நான் காண்பது என்ன கனவா? அல்லது நனவா? கண்களைத் துடைத்துக் கொண்டே மறுமுறையும் நோக்கினேன். என் மகன் 'ஜானத்' மற்றொரு பெண் குழந்தையுடன் விளையாடிக்கொண்டிருந்தான். 'ஜரீனு' என்றழைத்தார் அவர். அக் குழந்தை அவரது செல்விதான், சந்தேகமில்லை. இவ்விதம் எண்ணியதும், என் உள்ளத்தில் அமுங்கிக் கிடந்த பகையுணர்ச்சி புத்துயிர் பெற்றது. என் குழந்தை அவருடைய குழந்தையோடு விளையாடுவதைக் காண என் மனம் பொறுக்கவில்லை. 'ஜானத்! இப்படி வா' எனக் கத்திவிட்டேன். இதைக் கேட்டதும், அவர் என்னை ஏறிட்டுப் பார்த்தார். என்ன எண்ணினாரோ? என் 'ஜானை'தை, வாரி எடுத்து முத்தமிட்டுச் சென்றுவிட்டார். அந்தச் செய்கை என் மனத்திலே ஒரு மாறுதலை உண்டாக்கிவிட்டது. எழுந்த பகை உணர்ச்சியை மற்றொரு உணர்ச்சி அமுக்கி விட்டது. ஆர்வத்தோடு ஓடிச்சென்று அவரது 'ஜரீனு'வை எடுத்து உச்சி மோர்ந்தேன். என் உள்ளம் பூரிப்பால் மலர்ந்தது.

---


# வாழ்க்கையில் வெற்றி

5—ம் பதிப்பு

எழுதியவர் : எம். ஆர். எம். அப்துர் ரஹீம், பி. ஏ.

" நான் இவ்வுலகில் ஒரு தடவைதான் வாழமுடியும், அவ் வாழ்நாளை ஒரு குமாஸ்தாவாக இருந்து நான் கழிக்கப்போவதில்லை " என்று பேரறிஞர் பெர்னார்ட்ஷா கூறியதாகத் தொடங்கி, விறுவிறுப்பான இனிய தமிழிலே வாழ்க்கையில் வெற்றி பெறும் வழி வகைகளைக் கூறிச் செல்லும் சிறந்த நூல். விலை ரூ. 2—8—0 (தபால் செலவு தனி.)

அன்பு நூல் நிலையம்

132, பிராட்வே, சென்னை-1.




[முன் இதழின் தொடர்ச்சி]

# இந்தியாவில் இளம் பிறைத் தோற்றம்

மஹ்மூது பிரெல்வி

இப்னு பதூதா அவர்கள் இந்தியாவுக்கு விஜயம் செய்த காலத்தில், ஷெய்குல் இஸ்லாம் ஹஜ்ரத் பஹாவுத்தீன் ஜக்கரியா முல்தானியின் சீடராகிய மக்தூம் ஜஹானியன் சய்யித் ஜலாலுத்தீன் பொகாரீ என்பவர் சிந்திலே உச்ஹ என்னுமிடத்தில் வசித்து வந்தார். (இவருடைய காலம், கி. பி. 1307—1397)

எகிப்திலே, பாத்திமித் இஸ்மாயிலீ வம்சத்தின் அரசாங்கம், சுல்தான் சலாஹுத்தீன் அய்யூபியினால் ஹிஜ்ரி 567-ல் ஒரு முடிவுக்குக் கொண்டுவரப்பட்டது, இஸ்மாயிலீ நிஜாரீ வம்சத்தின் பயங்கர ஆட்சியை ஹஸன் இப்னு சபஹ் என்பவர் ஹிஜ்ரி 483-ல் அல்மவுத்திலே ஸ்தாபித்தார். இந்தப் "பயங்கர ஆட்சி"யும் ஹுலகு என்னும் தார்த்தாரிய மன்னனின் கொடிய வாளினால் ஹிஜ்ரி 654-ல் ஒடுக்கப்பட்டுவிட்டது.

பழங்கால முஸ்லிம் சரித்திராசிரியர்களின் கூற்றுப்படி, சோம்ராக்கள் இன அடிப்படையில் இந்தோ—அரபு கலப்பு சாதியினராகக் கருதப்பட்டனர். அப்பாஸிய கலீபாவாகிய முஅத்தஸிம் பில்லாஹ் என்பவரால் நிர்மாணிக்கப் பெற்ற "சமர்ராஹ்" (அல்லது சமன்ராய்) என்னும் நகருக்கும் இந்த சோம்ராக்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. இக்குடும்பத்தைத் தோற்றுவித்தவரின் பெயர் சோமர் என்று சொல்லப்பட்டதால், அவரது சந்ததிகள் சோம்ராக்கள் என்று அழைக்கப்படுகின்றனர். என்சைக்ளோபீடியா பிரிட்டானிகாவின் 11-வது பதிப்பில் "சிந்து" என்பதைப்பற்றி எழுதியவரும், இ்லியட் என்பாரும், இந்த சோம்ராக்கள், ரஜபுத்திரர்களாயிருந்து மதம் மாறியவர்கள் என்று நிரூபிக்க, தவறான முறையில் முயன்றிருக்கின்றனர். மௌலவீ அப்துல் ஹலீம் ஷரர்

அவர்களும் முகத்தவஸீயைத் தவறாகப் புரிந்து கொண்டு, சோம்ராக்கள் மதம் மாறிய யூதர்களாயிருந்திருக்கலாம் என்று தெரிவித்துள்ளார்.

## சம்மாக்கள்

இல்லியட் என்னும் எழுத்தாளரும், "என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா", "என்சைக்ளோபீடியா இஸ்லாம்" ஆகிய நூல்களுக்குக் கட்டுரைகள் வழங்கியவர்களும், சம்மாக்களைப் பற்றி எழுதும்போது, அவர்கள் மதம் மாறிய ரஜபுத்திரர்கள் என்று கருதுகின்றனர். அரபும் ஹிந்தியும் கலந்த ஒரு கலப்பு மொழியே இவர்களின் பெயர்களைக் குறித்தன. ஹிஜ்ரி 752-லிருந்து, 927 வரையில் 175 வருடகாலம் இவர்கள் சிந்துவை ஆட்சிபுரிந்தனர். முற்காலத்தில் ராஜபுத்திரர்களாயிருந்த இவர்கள், கட்ச்லிருந்தும் கவாகரிலிருந்தும் சிந்துவில் குடியேறியதாகவும், அங்கேதான் அவர்கள் இஸ்லாத்தைத் தழுவியதாகவும் என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா, என்சைக்ளோபீடியா இஸ்லாம் ஆகியவைகளில் எழுதியவர்கள் கருதுகின்றனர். கட்சுவிலிருந்துதான் இவர்கள் சிந்துவுக்கு வந்ததாக தாரிக்கே மஸூமியிலும் காணப்படுகின்றது. முஹம்மது இப்னு காசிமின் தலைமையில் அரபுகள் சிந்துவின் மீது படையெடுக்கு முன்பே, சம்மாக்கள் சிந்துவில் குடியேறியிருந்தாக "சாச் நாமா" கூறுகிறது. "தாரிகே தாஹிரி"யின் கூற்றுக்கிணங்க, சிந்துவின் கடற்கரைப் பிரதேசங்களையெல்லாம் இவர்கள் ஆண்டுவந்ததாகவும், இவர்கள் கட்சு ராஜாவின் பாம்பரையைச் சேர்ந்தவர்கள் என்றும் தெரியவருகின்றது.

சுல்தான் முஹம்மது ஷா துக்ளக் டில்லியில் ஆட்சிபுரிந்த காலத்திலே, சிந்துவில் சம்மாக்களின் ஆட்சி மறைந்து, சோம்ராக்களின் ஆட்சி ஏற்பட்டதாக தாரிகே பரிஷ்தாவில் காணப்படுகிறது. சம்மா அரசர்கள் முஸ்லிம்களாயிருந்தனர். இவர்கள் டெல்லி சுல்தானின் அதிகாரத்தையும் ஒப்புக் கொண்டிருந்தார்கள். இந்த வம்சத்தின் முதல் மன்னரின் பெயர் ஜாம் உனார் என்பது. இவருக்குப் பின் இவருடைய சகோதரர் ஜாம் ஜூனா என்பவர் பட்டத்துக்கு வந்தார். இவருக்குப் பின்பு இவருடைய மகள் ஜாம் மணி என்னும் பெண்மணி பட்டத்தையடைந்தார். இவர் டெல்லி சுல்தானை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். இதன் விளைவாக இவர் சுல்தான் பிரோஸ் ஷா துக்ளக்கின் தாக்குதலுக்கு ஆளாக நேர்ந்தது. சுல்தான் பிரோஸ் ஷா ஹிஜ்ரி 762-ல் சிந்துவின்மீது படையெடுத்தபோது நேரில் கண்ட பல விஷயங்களை சிராஜ் அபீப் என்னும் சரித்திராசிரியர் எழுதியிருக்கின்றார். அச்சமயத்தில் சமாதானத்துக்கு வருமாறு ஜாம் வற்புறுத்தப்பட்டார். சிந்துவின் மாபெரும் ஞானியாகிய சய்யித் ஜலாலுத்தீன் ஹுஸைன் பொகாரீ அவர்கள் இச்சமயத்தில் உச்ஹ் என்னுமிடத்தில் வாழ்ந்து வந்தார். இவருடைய தலையீட்டை ஜாம் விரும்பினார். இதன் பயனாக சுல்தானிடமிருந்து ஜாமுக்கு மன்னிப்புவாங்கித் தருவதற்கும், சமாதானத்துக்கு ஏற்பாடுகள் செய்வதற்கும் சய்யித் ஒரு முக்கியக் கருவியாக விளங்கினார்.

சிந்துவை ஆண்டு வந்த சம்மா அரசர்கள், அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு முன்பே, இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். இஸ்லாத்தின் மாபெரும் ஞானிகளாய்த் திகழ்ந்த ஷெய்குல் இஸ்லாம் பஹாவுத்தீன் ஜக்கரியா, சய்யித் ஜலாலுத்தீன் பொகாரீ ஆகியவர்களின் பிரசாரமும் செல்வாக்கும் காரணமாக இந்த முஸ்லிம்கள் "சுன்னத் ஜமா அத்"தை சேர்ந்தவர்களாகவே யிருந்தனர்.

## முல்தான் ராஜ்யம்

ஹிஜ்ரி முதல் நூற்றுண்டிலேயே (கி. பி. 7-வது நூற்றுண்டு) அரபுகள் முல்தானை வென்றனர். சுல்தான் மஹ்மூது கஜ்னவீயின் படையெடுப்பு நடைபெறுகின்ற காலம் வரையில் அரபுகளின் பாதுகாப்பிலேயே முல்தான் ராஜ்யம் இருந்து வந்தது. ஹிஜ்ரி மூன்றாவது காலாவது நூற்றுண்டுகளிலே வாழ்ந்து வந்த அரபு நாட்டுப் பிரயாணிகள் தங்கள் வரலாற்று நூல்களில் முல்தான் ராஜ்யத்தைப் பற்றிக் கூறியுள்ளனர். ஹிஜ்ரி 132-ம் ஆண்டு வரையில் டமாஸ்கஸில் (திமிஷ்க்) ஆட்சி புரிந்து வந்த உமய்யா அரசாங்கத்தின் அதிகாரத்துக்கு உட்பட்டதாகத்தான் முல்தான் இருந்து வந்தது. இதற்குப் பின் அப்பாஸியாக்களின் ஆட்சிக்கு அடங்கியதாக இருந்தது. ஹிஜ்ரி மூன்றாவது நூற்றுண்டின் மத்திய காலத்தில்தான் முல்தானின் முஸ்லிம் மன்னர் பூரண சுதந்தரப் பிரகடனம் செய்தார்.

முல்தானில் அப்பொழுது இருந்த முஸ்லிம் ராஜ்யம் அதிக விஸ்தீர்ணமுள்ளதாயிருந்தது. ஹிஜ்ரி 4-வது நூற்றுண்டிலே அதன் மேற்கு எல்லை, மக்ரானின் கிழக்கு எல்லைப் புறத்தைத் தொட்டுக் கொண்டிருந்தது. கிழக்கே மன்சூரா (சிந்து) வரையில் அது பரவியிருந்தது. இப்பரந்த முஸ்லிம் ராஜ்யத்தில் ஒரு இலட்சம் கிராமங்கள் இருந்தன.

ஹிஜ்ரி 358-ல் எகிப்து, பாத்திமித் வம்சத்தின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. பாத்திமித் கலீபாக்களின் தலைமைப் பீடமாக எகிப்து விளங்கியது. இச் சந்தர்ப்பத்தில்தான் இஸ்லாமிய உலகம் இரண்டாகப் பிரிந்தது. அதாவது, ஸுன்னீ, ஷீயா என இருவகுப்பினராக முஸ்லிம்கள் பிரிய நேர்ந்தது. ஸுன்னீ வகுப்பினர், பகுதாதின் அப்பாஸிய கலீபாக்களுக்கு ராஜவிசுவாசம் உள்ளவர்களாயினர். ஷீயாக்கள் கொய்ரோவில் இருந்த பாத்திமித் வம்சத்தின் கலீபாக்களுக்கு விசுவாசமுள்ளவர்களாக

இருந்தனர். பிரதேச முறையில் ஈரான் கெய்ரோவுடன் சேர்ந்திருந்தது. ஆனால் ஆசியா மைனரில் இருந்த துருக்கி ராஜ்யங்களும், பொகாராவின் சமனித்களும், கஜ்னவிகளும், செல்ஜுக் சாதியினரும் அப்பாஸிய கலீபாக்களுக்கே விசுவாசத்துடன் நடந்து கொண்டனர்.

ஹிஜ்ரி 387-க்கும் 390-க்கும் இடையிட்ட காலத்தில், பகுதாதின் கலீபா அவர்கள், அப்போது புகழுடன் விளங்கிய சுல்தான் மஹ்மூது கஜ்னவிக்கு மரியாதைப் பட்டங்கள் வழங்கியும், "அமீனுல் மில்லத்," "யாமீனுல் தௌலத்" முதலிய கௌரவப்பட்டங்கள் அளித்தும் அவரைப் பெருமைப் படுத்தினார்.

மூல்தான் ஒரு முஸ்லிம் நகரம் என்று சொல்லக் கூடியதாக அதன் தோற்றம் இருந்தது. இதனைச் சுற்றிலும் மாபெரும் சுவர்களும் அரண்களும் அமைக்கப்பட்டிருந்தன. முஹம்மது இப்னு காசிமால் கட்டப்பெற்ற ஜும்ஆ மஸ்ஜித் ஒன்று இங்கே இருந்ததாக அல்பிரூனி என்னும் சரித்திராசிரியர் எழுதியிருக்கின்றார்.

(தொடரும்)





வாழ்வு தேடி அங்குமிங்கும் நாதியற்றுத் திரிந்த ஒரு ஏழை விறகு வெட்டியின் மகனான லிங்கன், அமெரிக்காவின் ஜனாதிபதியானான்! மனித உள்ளத்தை நடுங்க வைக்கும் அடிமை முறையின் அக்கிரமத்தை ஒழித்து, கோடி கோடி மக்களுக்கு வாழ்வு அளித்தான். இறுதியில் அந்தப் புனிதத் தொண்டு ஆற்றிக் கொண்டிருக்கும் பொழுதே சுட்டுக் கொல்லப்பட்டான். இந்த மனிதப் புனிதனின் ஈடு இணையற்ற வரலாறுதான் இந்நூல்.

விலை ரூ. 2—0—0

கிடைக்குமிடம்:

அன்பு நூல் நிலையம்

132, பிராட்வே, சென்னை-1.




# பாரூக்-பரீதா காதல் திருமணம்

சமீர் சௌக்கீ

இப்பொழுது மன்னர் பாரூக், ஆட்சி புரியத் துவங்கிவிட்டார். ஆனால் ஷாபினாஸை (பரீதா) மட்டும் அவரால் மறக்கமுடியவில்லை. ஐரோப்பிய சுற்றுப்பிரயாணம் முடிந்தவுடன் ஷாபினாஸ் தனது கல்வியைக் கற்றுத் தேர்ச்சி பெறுவதற்காகப் பள்ளிக்கூடத்துக்குத் திரும்பிச் சென்றாள். பாரூக் மறைமுகமாகத் தனது விருப்பத்தை ஷாபினாஸுக்குத் தெரிவித்திருந்தார். அவளும் தன் தந்தையிடம் சென்று உண்மையை உரைத்தாள். ஆனால் தந்தைக்கோ அதில் விருப்பமில்லை. "நீ விரும்புவதுபோல செய்ய உனக்கு உரிமையுண்டு. ஆனால் எனக்குத் தெரிந்தது என்னவென்றால், மன்னனை நீ மணக்கலாகாது என்பதுதான். இதைவிட அதிகமாக நான் உனக்குச் சொல்லமுடியாது. இவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்க நான் விரும்பவில்லை. இதை நான் என் மனமாரக் கூறுகிறேன், மறுபடியும் சொல்லுகிறேன், அவனை நீ கலியாணம் செய்து கொள்ளக்கூடாது என்று."



பாருக்கும் பரீதாவும், இவர்களுக்கு முதலில் பிறந்த பெண் குழந்தையும்

பாரூக் மீது தான் காதல் கொண்டிருப்பதாக முதல் தடவையாக இப்போதுதான் ஷாபினாஸ் ஒப்புக்கொண்டாள். இதையறிந்தவுடன் அந்த நீதிபதி, "என்னருமை மகளே! அது உண்மையாக இருக்கலாம். ஆனால், இவ்வளவு பெரிய விவாகத்துக்கு நான் பொறுப்பு ஏற்குமாறு ஆண்டவன் என்னை ஆக்கிவிடக்கூடாது என்று விரும்புகிறேன்."

இவ்விதமாகத் தெரிவித்துவிட்டு, நீதிபதி ஜுல்பிகார் தமது விடுமுறை நாட்களைக் கழிப்பதற்காக லெபனானுக்குப் புறப்பட்டுவிட்டார். ஆனால் அவர் இன்னும் லெபனானுக்குப்போய்ச் சேர்ந்தபாடில்லை. அதற்குள் மன்னர் பாரூக் எடுத்துக்கொண்ட அவசர நடவடிக்கைகள் அவரைத் தடுத்து நிறுத்திவிட்டன.

**1937**, ஆகஸ்டில் ஒரு நாள் மன்னர் பாரூக் காரிலே ஏறிக்கொண்டு, ஓரேயொரு மெய்காப்பாளருடன் அலெக்ஸாந்திரியாவிலுள்ள ஜுல்பிகாரின் வீட்டுக்குச் சென்றார். பொறுமையிழந்தவராக அவர் அந்த வீட்டின் மாடிப்படிகளில் மிக அவசரமாக ஏறி, கதவின் மணியை அடித்தார். உடனே கதவைத் திறந்த மேஜர் ஒருவன், அங்கே நிற்பவர் யார் என்பதைக் கண்டவுடன் நிலைதடுமாறி, ஒன்றும் புரியாமல் தவித்து நின்றான்.

"யூசுப் ஜுல்பிகார் உள்ளே இருக்கிறாரா?" என்று அதிகாரக் குரலில் அந்த வேலையாளை நோக்கிக் கேட்டார் பாரூக். அதற்கு அந்த வேலையாள் மிகப் பணிவுடன் தலைவணங்கி, "மன்னர் பெருமானே! அவர் வெளியூருக்குப் பிரயாணம் சென்றிருக்கிறார்" என்றான்.

"திருமதி ஜுல்பிகார் இருக்கிறாரா?"

"அரசர் பெருமானே! அவர் வெளியே போயிருக்கிறார்."

உடனே மாடிப்படியிலிருந்து இறங்கிச் செல்லும் எண்ணத்துடன் பாரூக் புறப்படத் துணிந்தார். ஆனால் எதையோ நினைத்துக் கொண்டவர்போல் திடீரெனத் திரும்பினார். "ஷாபினாஸ் இருக்கிறாளா?" என்று கேட்டார்.

"ஆம், இருக்கிறார், அரசே" என்ற பதில் கிடைத்தது.

"அப்படியானால், இப்பொழுதே அவளுடன் பேசவேண்டுமென்று நான் விரும்புவதாக அவளிடம் சொல்" என்றார்.

பாரூக் வெளியே காத்துக்கொண்டிருக்கிறார் என்பதை ஷாபினாஸ் கேள்வியுற்றவுடன், அவள் பரபரப்புடன் கீழே இறங்கிவந்தாள். இருவரின் கண்களும் சந்தித்தன. வாய் திறந்து ஒரு வார்த்தை கூட பேசவில்லை. ஒருவரை மற்றொருவர் உற்றுப் பார்த்துக்கொண்டே சற்றுநேரம் நின்றனர். இறுதியில் பாரூக் தனது வாயைத் திறந்து, "ஷாபினாஸ்! நீ என்னைத் திருமணம் செய்து கொள்வாயா?" என்று கேட்டுவிட்டார்.

இதைக் கேட்டவுடன் ஷாபினாஸ் நாணத்தால் தலைகுனிந்து நின்றாள். எதுவும் பேசாமல் மௌனமாக நின்றுகொண்டே இருந்தாள்.

"ஷாபினாஸ்! பதில் சொல்! ஏதாவது சொல்" என்று பாரூக் மீண்டும் கேட்டார்.

ஷாபினாஸ் தனது தலையை உயர்த்தினாள். வெட்கத்தால் அவள் முகம் சிவந்திருந்தது. மிகப் பணிவான இனிய குரலில் அவள் பேசினாள்:

"மன்னர் பெருமானே! இது எனக்கு ஒரு மாபெரும் கௌரவம்" என்றாள்.

"ஷாபினாஸ்! என்னை 'மன்னன்' என்று அழைக்காதே! எனக்கு நீ ஒரு பதில் தரவேண்டுமென்று விரும்புகிறேன்."

ஷாபினாஸ் புன்னகை பூத்து நின்றாள். "நானும்தான் விரும்புகிறேன். ஆனால்..."

"ஆனால்...என்ன?"

"நான் என் பெற்றோர்களைக் கேட்கவேண்டும்"

"உன் தந்தை எங்கேயிருக்கிறார்?"

"இப்பொழுதுதான் லெபனானுக்குக் கப்பலில் ஏறிச் சென்றார். மூன்று வாரத்துக்கு அங்கே இருப்பார்" என்று ஷாபினாஸ் தெரிவித்தாள்.

உடனே பாரூக் தனது மெய்காப்பாளரிடம் என்னவோ காதோடு காதாகச் சொன்னார். அவனும் அவ்விடத்தை விட்டு விரைவாக நடந்தான்.

"உன்னுடைய பதிலுக்காக நான் மூன்று வார காலம் காத்திருக்க முடியாது" என்று அந்தப் பெண்ணிடம் பாரூக் சொல்லிவிட்டு வெளியேறினார்.

நீதிபதி ஜுல்பிகார், போர்ட் சயித் துறைமுகத்தில் கப்பலில் ஏறி, தன்னை வழியனுப்ப அங்கே வந்திருந்த அவருடைய நண்பர்களுக்குப் "போய்வருகிறேன்" என்று சொல்லி, அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டிருந்தார். அதே சமயத்தில் ஒரு கும்பலாகச் சில உயர்தர அதிகாரிகள் அக்கப்பலில் ஏறினார்கள், உடனே அவர்கள் அந்தக் கப்பலின் காப்டனைப் பார்த்து, தாங்கள் வந்த காரியத்தைத் தெரிவித்தனர். நீதிபதி ஜுல்பிகாரை அவர்கள் உடனே கப்பலிலிருந்து இறக்கி, கெய்ரோவுக்குத் திரும்ப அழைத்துச் செல்லப் போவதாகத் தெரிவித்தனர். இதற்கு எவ்விதமான காரணமும் சொல்லப்படவில்லை. அடுத்த நிமிஷம் போலீஸ் பாதுகாவலுடன் நீதிபதி ஜுல்பிகார் தமது மூட்டை முடிச்சுக்களையெல்லாம் கட்டிக்கொண்டு கெய்ரோவுக்குப் பறந்து செல்லவேண்டியதாயிற்று.

இவர் தமது வீட்டுக்குச் சென்ற சில நிமிஷ நேரத்தில் அரண்மனை அதிகாரியிடமிருந்து டெலிபோன் செய்தியொன்று கிடைக்கப் பெற்றார். ஒரு அவசர காரியமாக மன்னர் உடனே அவ

ளைப் பார்க்க விரும்புவதாக அச் செய்தி கூறியது.

பாரூக் இருந்த அறைக்கு வெளியே நீதிபதி ஜுல்பிகார் சற்றுநேரம் காத்திருக்கவேண்டியதாயிற்று. அப்போதுதான் பாரூக் தனது தீர்மானத்தைப் பற்றித் தாயாருடன் பேசிக்கொண்டிருந்தார். "ஷாபினஸ் என் மருமகளாக வருவதைப் பற்றி எனக்கு ஆட்சேபமில்லை" என்று அவருடைய தாயார் தெரிவித்தாராயினும், கலியாணத்துக்குரிய வயதை பாரூக் இன்னும் அடையவில்லை என்பதை மகனுக்கு அறிவித்தார். "கலியாணம் என்பது வாலிபத்தின் முடிவும், மனிதத் தன்மையின் துவக்கமுமாகும். நீயோ இன்னும் மனிதனாக வளரவில்லை. இத்திருமணத்தால் ஒரேயொரு முடிவுதான் ஏற்படக் கூடும். கூடிய விரைவிலோ, அல்லது சில காலம் சென்ற பின்போ, இந்தப் பெண்ணை நீ கைவிட்டு விடுவாய். உன் விருப்பம்போல் செய்" என்று, மகனுக்குப் புத்திமதிகள் கூறினார்.

பாரூக் மிகவும் கோபம் அடைந்தார். "நான் என் இஷ்டம் போலவே செய்வேன். ஷாபினுவையே மணந்துகொள்வதென்று தீர்மானித்துவிட்டேன், எனது எஞ்சிய ஆயுட்காலம் முழுவதையும் அவளுக்கே அர்ப்பணிப்பேன். அவளையே மணக்குமாறு எனது ஆலோசர்கள் கூறுகின்றனர். நாடு முழுவதும் இத்திருமணத்துக்கு நல்வரவு கூறுகிறது" என்று அழுத்தமாகக் கூறினார் மன்னர் பாரூக். 5 அல்லது 6 வருஷ காலமாவது பொறுத்திருக்குமாறு ராணி கெஞ்சினார். ஆனால் பாரூக் தனது மனத்தை மாற்றிக் கொள்ளவில்லை. "ஐந்து நிமிஷம் கூட அதற்காகக் காத்திருக்க முடியாது" என்று அழுத்தமாகக் கூறிவிட்டார்.

இதற்குப்பின் நீதிபதி யூசுப் ஜுல்பிகார் உள்ளே சென்று பாரூக்கைக் கண்டார். அவருடைய மகளைத் தனக்கு விவாகம்செய்து தரவேண்டுமென்று மன்னர் அவரிடம் கோரினார். நீதிபதியும் மிக்கப் பணிவன்புடன் தனது கருத்தைத் தெரிவித்தார். திருமணத் தம்பதிகள் மிகவும் சிறிய வயதுள்ளவர்களாயிருப்பதால் விவாகத்துக்கு முன் அதிக காலம் காத்திருக்கவேண்டியது அவசியமென்பதை அவர் வற்புறுத்தினார். பாரூக் இதைப் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருக்க இயலவில்லை. ஜனவரி மாதம்வரையில்தான் காத்திருக்க முடியும் என்று சொல்லிவிட்டார் "எங்கள் குலமுறைக்கு ஏற்ப ஷாபினஸுக்குப் பதில் பரீதா என்று அவள் பெயரை மாற்றிக் கொள்ளப்போகிறேன்." என்று பாரூக் கூறினார்.

1938, ஜனவரி 20-ந் தேதியன்று திருமணம் நடைபெற்றது. அன்று வெளியூர்களிலிருந்து வந்திருந்த ஏராளமான மக்களுக்கு உணவளிப்பதற்காக கெய்ரோ நகரின் சதுக்கத்தில் எண்ணற்ற கூடாரங்கள் அடிக்கப்பட்டன. "பத்துக்கள்" என்னும் காட்டரபிகளின் தலைவர்கள் தங்கள் சீடர்களின் அன்பளிப்பாக அநேகவிதமான பொருள்களைக் கையில் ஏந்திய வண்ணம் அரண்மனையை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். மந்திரிகள் ஒவ்வொருவரும் பாரூக்குக்குத் தொழுகைக்குரிய தஸ்வீஹ் மணி மாலைகளை அன்பளிப்பாகத் தந்தனர். அதிலிருந்த ஒவ்வொரு விலையுயர்ந்த கல்லுக்கும் அருகில் ஒரு முத்து இருந்தது. கிறிஸ்து





வ்ப் பாதிரிமார்கள் ஒரு தங்கக் கிரீடம் அனுப்பியிருந்தனர். உலகத்திலுள்ள ஒவ்வொரு நாட்டிலிருந்தும் அன்பளிப்புகள் வந்திருந்தன. ஹிட்லரிடமிருந்து அழகிய மோட்டார் கார் ஒன்று வந்திருந்தது.

பாரூக் பரீதாவுக்காக ஒரு நெக்ளேஸை அன்பளிப்பாகத் தந்தார். இதன் சிறப்புப் பற்றி ஒரு கெய்ரோ பத்திரிகை எழுதியபோது, "அது ஒரு வைரக்கல் ஆறு என்று சொல்லுவதைவிட, காற்றில் மோதுங் கடல் அலை எனக் கூறலாம்" என்று வருணித்திருந்தது.

திருமண நாளன்று அதிகாலையில் 50 விருந்தினர்கள் கூடவே அரண்மனைக்குச் சென்றனர். அங்கே பெண்கள் யாரும் கிடையாது. இளவரசர் முஹம்மது அலீ அங்கே இருந்தார்.

பிரதமர் முஹம்மது மஹ்மூதும், அவருடைய மந்திரி சபையைச் சேர்ந்த அமைச்சர்களும் இருந்தனர். மணப் பெண்ணின் தந்தை நீதிபதி ஜுல்பிகாரும் அங்கே இருந்தார். பின்னர் மதத் தலைவர்கள் வந்தனர். இரண்டு பார்லிமெண்டுகளின் சபா நாயகர்களும் வந்தார்கள். ராஜகுடும்பத்தைச் சேர்ந்த பெரியவர்களும் அங்கே வீற்றிருந்தனர். அல்அஜ்ஹர் சர்வகலாசாலையின் அதிபதியாகிய ஷெய்குல் மராகீ அவர்கள் விவாக வைபவத்தைத் தலைமை தாங்கி நடத்தினார். திருமணத்தில் மன்னருக்குச் சாட்சியாக இருந்த சயீத் ஜுல்பிகார் பாஷாவும், அலீமெஹரும் மணவறைக்குச் சென்றனர். இங்கே ராணி நஸ்லீயுடனும், மற்ற அரசிளங்குமரிகளுடனும் பரீதா அமர்ந்திருந்தாள். "பாரூக்கை மணப்பதற்கு விரும்புகிறீர்களா?" என்று இஸ்லாமிய முறைப்படி பரீதாவிடம் கேட்கப்பட்டது. "பரீதாவின் பிரதிநிதியாக அவள் தந்தை திருமண உடன்படிக்கையில் கையெழுத்திடுவதற்குச் சம்மதமா?" என்றும் மணப் பெண்ணிடம் கேட்கப்பட்டது. மணமகள் தனது சம்மதத்தைத் தெரிவித்த பின், சாட்சிகள் பாரூக்கிடம் சென்றார்கள். அவருக்கு அருகில் மணப்பெண்ணின் தந்தையும், அல்அஜ்ஹர் அதிபர் ஷெய்குல் மராகீயும் நின்று கொண்டிருந்தனர். திருமண உடன்படிக்கையை அல்அஜ்ஹரின் அதிபர் படித்து முடித்தவுடன் மன்னரும் அவருடைய மாமனாரும் தங்கள் வலது கரங்களைப் பிணைத்துப் பிடித்துக் கெண்டார்கள். அவர்களின் கைகள் மீது ஷெய்குல் மராகீ தமது கரங்களை வைத்தார். அவர், நீதிபதியைப் பார்த்து, "உங்கள் மகளை பாரூக்குக்கு விவாகம் செய்து தர ஒப்புக்கொள்கிறீர்களா?" என்று கேட்டார்.

நீதிபதி மிகவும் அமைதியாக, "ஆம், என் மகளை மன்னருக்கு மணமுடித்துத் தர சம்மதிக்கிறேன்" என்று கூறினார். அதற்கு பாரூக், "உங்கள் புத்திரி பரீதாவை ஏற்றுக்கொண்டு, அவளை என் ராணியாக்கிக் கொள்கிறேன்" என்று மறுமொழி கூறினார். பின்னர் அல்அஜ்ஹரின் அதிபர் மணமக்களை வாழ்த்தியருளினார். விவாக உடன்படிக்கையில் முதலில் பாரூக் கையெழுத்திட்டார். பிறகு நீதிபதி ஜுல்பிகார் கையொப்பமிட்டார்.

விவாகச் சடங்கு முடிந்தது. ஷர்பத்தும் மிட்டாய்களும் வழங்கப்பட்டன. பரீதா ராணியாகிவிட்டாள் என்பதை அங்கீகரிப்பதற்கு அறிகுறியாக 101 குண்டுகள் வெடிக்கப்பட்டன.

எட்டு மணி நேரம் கழிந்து, பரீதா தனது கணவரைக் காணாமலேயே அவளுடைய தாய் வீட்டுக்குத் திரும்பி, கூடவே அரண்மனைக்குப் புறப்படத் தயாரானாள். அவள் தனது அழகிய வெண்ணிற விவாக உடையில் காரில் சென்றபோது, வழி நெடுகிலும் ஏராளமான மக்கள் கூடி நின்று குதூகலத்துடன் வாழ்த்தினார்கள். குதிரை மீது ஆரோகணித்து நின்ற மன்னரின் மெய்காப்பாளர்கள் அரண்மனையின் வாசலில் நின்று மணமகளை வரவேற்றனர். நகரமெங்கும் நடைபெற்ற வாண வேடிக்கைகளால் ஆகாயம் ஒளிமயமாக இருந்தது.

ஆனால் கூடிய விரைவில் நாட்டிலே இப் புதிய தம்பதிகளின் மணவாழ்க்கை நன்றாயில்லை என்ற வதந்தி உலாவியது. மற்றக் கீழ்த்திசைப் பெண்களைப்போல் பரீதாவையும் அந்தப்புறத்திலே தான் வைத்திருக்கவேண்டும் என்று பாரூக்கின் ஆலோசகர்கள் அவருக்குச் சொன்னார்கள். அவர்களில் ஒருவன் இன்னொரு அபூர்வ யோசனையையும் அவருக்குக் கூறினான். ஒரு மனைவி தன்னுடைய கணவனை நன்கு புரிந்துகொள்ள வேண்டுமாயின், அதற்கு ஒரே வழி, அவன் அவளை உருட்டியும் மிரட்டியும் வைப்பதுதான் என்று தெரிவித்திருந்தான். இதே ஆசாமி, தனது மனைவியும் தானும் புதுமணத் தம்பதிகளாயிருக்கும் போதே அவளை அடித்துப் புடைத்த செய்தியைப் பாரூக்குக்குத் தெரிவித்திருக்கிறான். மேல்நாட்டு முறையில் அதிகமாகப் பழக்கப்பட்ட பரீதாவினால் இதையெல்லாம் சகித்துக்கொண்டிருக்கமுடியாது. கணவனின் சகிப்புத் தன்மையற்ற போக்கைக் கண்டு பரீதா மிகவும் வருத்தமடைந்தாள்.

முதலில் கணவனும் மனைவியும் சேர்ந்தே, தங்கள் நண்பர்களைக் காணச் சென்றார்கள். அவர்களுக்கு மிக்க ஆடம்பரமாக விருந்துபசாரங்கள் நடத்திக் களித்திருந்தார்கள். ஆனால் இதற்கு முன்பே அவர்களிருவருக்குமிடையே மனவேற்றுமை முற்றி வருவதாக அரண்மனையில் இருப்பவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்ளத் தொடங்கினர். எனினும் நவம்பரில் பாரூக்குக்கும் பரீதாவுக்கும் ஒரு குழந்தை பிறக்கப்போகிறதென்ற செய்தியை அறிந்து நாடு முழுதும் பெருமகிழ்ச்சியடைந்தது. தனக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்கப்

போவதாகவே அனைவருக்கும் பாருக் சொல்லிக்கொண்டிருந்தார். எகிப்தின் பட்டத்துக்குரிய இளவரசனுக்கு உகந்த முறையில் அவனைப் படிக்கவைக்கவும் பெரிய திட்டங்கள் தயாரித்தார்.

ஆனால் பரீதா பெரிதும் அச்சமுற்றிருந்தாள். ஒருகால் பெண் குழந்தையைப் பெற்று, பாருக்கை ஏமாற்றமடையச்செய்ய நேரிடுமோ என்று அவள் அஞ்சினாள். ஆண் குழந்தை பிறந்தால் இருவரும் மகிழ்ச்சியடையலாம். பெண் குழந்தை பிறந்தால், அவர்களின் எதிர்கால நம்பிக்கைகளெல்லாம் இடிந்து தகர்ந்துவிடும். நவம்பர் 17-ந் தேதியன்று பரீதாவுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. பரீதாவுக்கு மருத்துவம் பார்த்தவர்கள் இச் செய்தியை அவளிடம் முதன் முதலில் தெரிவித்தபோது, அவள் 'கோ'வென்று கதறி அழுதாள். பாருக்குக்கு இது ஒரு பேரிடியாக இருந்தது.

(தொடரும்)

## கெய்ரோவின் அரண்மனையில் அரச குடும்பத்தினர்

இந்த இதழில் 33, 34-வது பக்கங்களில் உள்ள படத்தில் இடது கோடியில் இருப்பவர் பாருக்கின் தாயார் நஸ்லீ, இவர் இப்பொது கலிபோர்னியாவில் இருக்கிறார். இவருக்கு அருகில் இருப்பவர் மன்னரின் மூத்த சகோதரி பவ்ஜியா, இவர்தான் பாரசீக மன்னர் முஹம்மது ஷாவை மணந்து விவாக விடுதலைப் பெற்றவர். பாருக்கின் முதல் மனைவி பரீதா, தன் கணவருக்குப் பக்கத்தில் புன்சிரிப்புடன் உட்கார்ந்திருக்கிறார். வலது கோடியில் இருப்பவர் பாருக்கின் இரண்டாவது சகோதரி பாய்ஜா. அவருக்குப் பக்கத்தில் இருப்பவர், பாரசீக மன்ன முஹம்மதுஷாவுடன் இரட்டைக் குழந்தையாகப் பிறந்த அரசிளங்குமரி அஷ்ரப்.

---

## யூதர்களின் உலக ஜனத் தொகை

**உலக முழுதும் 11,672,000 யூதர்கள் இருப்பதாக உலக யூதர் காங்கிரஸ் அறிவிக்கிறது. இதில் 70 சதவிகிதத்துக்கு மேல் மூன்று நாடுகளில் வாழ்ந்து வருகின்றனர். அதாவது, அமெரிக்காவில் 5,000,000 பேர்களும், ருஷ்யாவில் 2,000,000 பேர்களும், இஸ்ராயிலில் 1,450,000 பேர்களும் இருக்கின்றனர்.**



உலகத்திலே மிகப் பெரிய பணக்காரராக, குபேர செல்வம் படைத்த கோமானாக விளங்குகிறார் குவைத் நாட்டின் மன்னர். அவருடைய எளிய வாழ்க்கையும் இடையறாத உழைப்பும் உலக மக்களுக்கு ஒரு 'முன்மாதிரி'

# குபேர செல்வம் படைத்த குவைத் மன்னன்

எம். ராஜ் முஹம்மது, B.A.,

குவைத் நாட்டின் மன்னர் ஷேய்க் அப்துல்லா அல் சலீம் அல் சபஹ அவர்கள் பாரசீக வளைகுடாவில் உள்ள புராதீன நகரமொன்றிலே சாதாரண வீடு ஒன்றில் எளிய வாழ்க்கை நடத்தி வருகின்றார். சென்ற வருடம் அவரது வருமானம் 5 கோடி பவுன். இதற்கு வருமான வரி கிடையாது. தொழில் மன்னன் ராக்பெல்லரும், குபேரசெல்வத்துடன் வாழ்ந்த இந்திய அரசர்களுங் கூட இவ்வளவு பெருநிதி படைத்திருக்கவில்லை.

குவைதின் மன்னர் ஒட்டகையின் மயிரினால் செய்யப்பட்ட நீண்ட அங்கியொன்று அணிந்திருக்கிறார். அவருடைய தலையின் மீது ஒரு அழகிய துணி கட்டப்பட்டிருக்கிறது. மன்னர் அப்துல்லா தமது அறுபதாவது வயதிலும் உடலுறுதி படைத்திருக்கின்றார். உயரமான உருவம்; கம்பீரமான தோற்றம். ஆனால் பார்ப்பதற்கு அன்பும் அருளும் நிறைந்தவராகக் காணப்படுகிறார். அவர் மெல்லிய குரலில் பேசினாலும் அது அதிகாரத்தொனியுடையதாயிருக்கிறது.

ஒரே மணல் வெளியாகத் தோன்றும் குவைத் நாட்டின் பூமிக்கு அடியிலே மதிப்பிடமுடியாத மாநிதி யொன்று மறைந்து கிடந்தது. குவைத் நகரின் தென் பகுதியில் இருபத்தைந்தாவது மைல் கல்லின் எல்லையாக 'பர்கன்' என்னும் எண்ணெய்ப் பிரதேசம் இருக்கிறது. இங்கே, 1952-ல் மூன்று கோடி 'டன்' எண்ணெய் கிடைத்திருக்கிறது. சுமார் 8 மைல் விஸ்தீரணமுள்ள முட்டை வடிவான இப் பிரதேசத்தில், முழு உலகிலும் கிடைக்கக் கூடிய எண்ணெயில் 6-ல் ஒரு பகுதி இங்கே கிடைக்கிறது. இதில் கிடைக்கும் ஒவ்வொரு பீப்பா எண்ணெயும் மன்னருக்கே சொந்தம். மற்றவர் யாருக்கும் இதில் உரிமையில்லை.

நபிகள் நாதரின் காலத்திலிருந்து, சென்ற 15 வருடத்துக்கு முன் வரையில் இப் பிரதே

சத்தில் எண்ணெய்க் கிணறுகள் இருந்த விஷயம் யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. இந்த நகரின் ஒரு இலட்சம் மக்களும் மிகத் தாழ்ந்த வாழ்க்கைத் தரமுள்ளவர்களாகத் தாழ்வாகக் கட்டப்பட்ட மண் குடிசைகளில் வாழ்ந்து வந்தனர். கோணல் மாணலாக இருந்த இதன் வீதிகளில் குப்பை கூளங்கள் நிறைந்திருந்தன. இவ்வீதிகளில் செல்லும் ஒட்டகங்களும் ஓயாமல் புழுதியை எழுப்பிக் கொண்டிருந்தன. வருஷத்தில் ஆறு மாதம் இங்கே மழையைக் காண முடியாது. ஒரு சில கிணறுகளே இருந்தன. சில வியாபாரிகளும், முத்துத் தொழிலில் ஈடுபட்டவர்களும் தவிர மற்றவர் அனைவரும் மகா மோசமான வறுமையிலும் நோயிலுமே உழன்று கொண்டிருந்தனர்.

அமைதியான கடலின்மேல் திடீரெனப் பேரலைகள் எழும்புவதைப்போல், இங்கே எண்ணெய்க் கிணறுகள் கண்டுபிடிக்கப்பட்டன.

1934-ம் ஆண்டிலே ஆங்கிலோ-ஈரானிய எண்ணெய்க் கம்பெனியும் அமெரிக்க எண்ணெய்க் கம்பெனியும் சம பங்காளிகளாகச் சேர்ந்து, குவைத் எண்ணெய்க் கம்பெனியைத் தோற்றுவித்தனர். 1938-ல் தான் இக்கம்பெனியால் எண்ணெயைக் கண்டுபிடிக்க முடிந்தது. இதற்கிடையிலே நடைபெற்ற உலகப் போரின் காரணமாக இக் கம்பெனியின் வேலைகள் தடைப்பட்டன.

ஆனால் 1947-ல், உலகம் வியக்கத்தக்க விதமாக குவைதின் எண்ணெய்க் கிணறுகளில் வெள்ளம் போல் எண்ணெய் பொங்கி வழிந்தது.

அமெரிக்காவிலே அதன் எண்ணெய்க் கிணறுகளிலிருந்து நாள் ஒன்றுக்கு 16 பீப்பா எண்ணெய் தான் கிடைக்கிறது. மத்தியக் கிழக்குப் பிரதேசத்திலே 4 ஆயிரம் முதல் 16 ஆயிரம் பீப்பாக்கள் வரையில் கிடைக்கிறது. 1949-ம் ஆண்டிலே குவைதில் பர்கன் எண்ணெய்ப் பிரதேசத்தில் நாள் ஒன்றுக்கு இரண்டு லட்சத்து நாற்பதாயிரம் பீப்பாக்கள் கிடைத்தன. 1951-ல் இது 6,50,000 மாகப் பெருகியது. இது இன்னும் அதிகமாகப் பெருகிக் கொண்டேயிருக்கும் போலும்.

குவைத் நகரின் எண்ணெய்க் கிணறு ஒரு பெரிய பூமியதிர்ச்சியுடன் ஏற்பட்டதாம். பாலைவனத்திலே ஒரு மாபெருஞ் சத்தமிட்டவண்ணம் இதன் அங்குரார்ப்பணம் நடைபெற்றதாம்.

இப்பிரதேசம் பூராவும் எண்ணெய்த் தோண்டும் கருவிகளாலும், எண்ணெய் நிரப்பப்படும் விசாலமான தொட்டிகளாலும் நிறைந்திருக்கிறது. இரவுப் பொழுதில் இப் பாலைவனப் பிரதேசத்திலே எழும்பும் நெருப்புக் கதிர்கள் விண்முட்டக் கிளம்பி, எங்கும் செந்நிற ஒளியைப் பரப்பிக் கொண்டிருக்கிறது.

உலகிலேயே மிகப் பெரியதென்று சொல்லப்படும் ஒரு மைல் நீளமுள்ள இவ்வளைகுடாவின் துறைமுகத்திலே ஒரே சமயத்தில் 8 பெரிய கப்பல்கள் எண்ணெயை உறிஞ்சிக் குடித்து நிரப்பிக்கொண்டு மற்றக் கப்பல்களுக்கு இடங்கொடுத்து வெளியேறுகின்றன.

எண்ணெய் உற்பத்தியால் ஏற்றம் பெற்ற இப்பிரதேசத்திலே, புத்தம் புதிய நகரங்கள் தோன்றின. நீளமான வீதிகளில் ஓரடுக்கு வீடுகளிலே ஆபீஸ்களும், பிரயாணிகள் தங்குமிடங்களும், ஆஸ்பத்திரிகளும் இருக்கின்றன.

இன்று குவைத் நகரின் பழங்குடி மக்களுக்காகத் தொழிற் பள்ளிக்கூடங்கள் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் இப்போது நன்கு பயிற்சி பெற்ற தொழிலாளிகளாகவும், மெக்கானிக்குகளாகவும் லாரி ஓட்டும் டிரைவர்களாகவும் கைதேர்ந்த தச்சுவேலை நிபுணர்களாகவும் விளங்குகின்றனர்.

குவைத் நகரின் கடைகளில் அன்னிய நாட்டுச் சாமான்கள் ஏராளமாக மின்னல் வேகத்தில் வந்து குவிந்தன. டின்களில் அடைக்கப்பெற்ற உயர்தரமான ஆகாரப் பொருள்களும், ரேடியோக்களும் நாற்காலி, மேஜைகளும், ஐஸ் பெட்டிகளும் அங்கே வந்து சேர்ந்தன. பட்டுத் துணிகள் முதல் பல் துலக்கும் பசை வரையில் வெளிநாட்டு வியாபாரிகள் வீதிகளிலே கூவிக் கூவி விற்கலாயினர்.

இத்தகைய சரித்திரப் பிரசித்தி வாய்ந்த முன்னேற்றத்தின் நடுவே தான் இந்த நாட்டின் பழைய மன்னர் சர் அஹ்மது அல்ஜபீர் காலமானார். இவருக்குப் பின் பதவிக்கு வந்தவர்தான் இன்றுள்ள மன்னர் அப்துல்லா அல் சலீம் அல் சபஹ்.

அப்துல்லா ஒரு சிறந்த கல்விமான். எடுத்த காரியத்தை இனிது முடிக்கும் ஆற்றல் படைத்தவர். அவர் பதவிக்கு வந்த சமயத்தில் பழங்கால மன்னர்களைப் போல் ஆடம்பர வாழ்வு நடத்துவார் என்றுதான் யாவரும் நினைத்தார்கள். ஆனால் அதற்கு மாறாக அவர் தமது பழைய வீட்டிலேயே வாழ்ந்து வரலானார். தமது அழகிய அரண்மனையை வியாபாரத்துக்காகப் பயன்படுத்திக் கொண்டார். சென்ற வருடம் இவருக்கு எண்ணெய் மூலம் கிடைத்த வருமானம் ஒரு கோடி பவுன்கள்! "இப்பெருநிதி இந்நாட்டு மக்களுக்கே உரியது. அதனைப் பாதுகாக்கும் காவலனே நான்! ஒரு சில நாட்களில் எண்ணெய் கிடைக்காமல் போனாலும் போகலாம். ஆகையால், மக்களுடைய பணத்தை அவர்களின் அறிவு வளர்ச்சிக்காகவும் உடல் நலத்துக்காகவுமே செலவிடவேண்டும்" என்று மன்னர் அப்துல்லா கூறுகிறார்.

குவைத் நகரில் நல்ல தண்ணீர் கிடைப்பது அரிது. கடல் நீரைக் குடிப்பதற்கு ஏற்றதாகச் சுத்தம் செய்யும் கருவியொன்று எண்ணெய்க் கம்பெனியால் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. இக்

குருவியின் மூலம் நாள் ஒன்றுக்கு 6 லட்சம் காலன் தண்ணீர் சுத்தம் செய்யப்பட்டது. ஆனால் தினந்தோறும் 12 லட்சம் காலன் தண்ணீரை சுத்தம் செய்யக் கூடிய புதிய மெஷின் ஒன்றை மன்னர் தமது சொந்தச் செலவில் நிர்மாணித்துக் கொண்டிருக்கிறார். இவருடைய அரிய முயற்சியால் ஒரு மாபெரும் நவீன ஆஸ்பத்திரியும், க்ஷயரோக விடுதியும் நிர்மாணிக்கப் பெற்றுள்ளன. முன்பு குவைத் நாட்டிலே 6 ஆரம்பப் பள்ளிக் கூடங்களே இருந்தன. அதில் 600 மாணவர்கள்தான் கல்வி கற்று வந்தனர். ஆனால் மன்னர் தமது முயற்சியால் இப்போது 20 புதிய பள்ளிக் கூடங்களை அமைத்து, 8000 மாணவர்கள் கல்வியறிவு பெற வாய்ப்பளித்திருக்கிறார், இவைகளைத் தவிர ஒரு மத்தியதரப் பள்ளிக்கூடமும், ஒரு சிறிய சர்வகலாசாலையும் அமைக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார். இவைகளில் 700 மாணவர்கள் உணவும் உறைவிடமும் பெற்றுப் படித்துவர வசதிகள் செய்யப்படும். குவைத் நகரிலே குறுகலான வீதிகளையும் நெருக்கமான வீடுகளையுமே காணமுடியும். ஆனால் மன்னர் அப்துல்லா மிக அகலமான வீதிகளையும் விசாலமான வீடுகளையும் கட்டுவதற்குத் திட்டமிட்டிருக்கிறார்.

100 பிரிட்டிஷ் தொழில் நிபுணர்கள் இந்தத் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக நியமிக்கப்பட்டிருக்கின்றனர். மத்தியக் கிழக்கிலே எகிப்து, ஈரான் முதலிய முஸ்லிம் நாடுகளில் பிரிட்டிஷ் உறவு துண்டிக்கப்படக் கூடிய இன்றைய நிலையிலும் குவைத் மன்னர் பிரிட்டிஷ் தொழில் நிபுணர்களையே நம்பிக் கொண்டிருக்கிறார். அவர்களின் திறமையைப் புகழ்ந்து பாராட்டுகிறார்.

அமெரிக்கர்களின் உதவியையும் மன்னர் அப்துல்லா விரும்புகிறார். அமெரிக்க பெய்ரூத் (Beirut) பல்கலைக் கழகத்தின் தலைவர் டாக்டர் ஸ்டீபன் பென்ரோஸ் இன்று இந்த நாட்டின் கல்வி ஆலோசனையாளராக இருந்து வருகிறார்.

குவலயத்திலே ஒரு குழப்பமான நிலையிலுள்ள குவைத் நாட்டில் இன்று அப்துல்லாவின் திட்டத்தில் ஒரு அழகிய புதிய உலகம் உருவெடுக்கத் துவங்கியுள்ளது.

ஒரு சில ஆண்டுகளில் அநேக பல நூற்றாண்டுகளைக் கடந்து விட்டது போல் அந்த நாட்டிலே இன்று பல மாறுதல்கள் காணப்படுகின்றன. குவைத் நாட்டின் வீதிகளிலே பழைமையும் புதுமையும் நிறைந்த கட்டடங்களைக் காண்கிறோம். பழைமையின் சின்னமாக அதன் வீதிகளிலே இன்று காட்டரபிகள் தங்கள் ஒட்டகங்களை ஓட்டிச் செல்வதைக் காணலாம். மஸ்ஜிதுகளின் மினாராக்களில் மின்சாரக்கம்பிகள் இணைக்கப்பட்டு, "முஅதின்" சொல்லும் பாங்கு ஒலியின் நாதம் ஒலி பெருக்கியின் மூலம் வெகுதூரத்துக்குக் கேட்குமாறு செய்யப்படுகிறது. தற்கால நாகரிகமான தொழிற்சாலைகளிலிருந்து தலைப்பாகையணிந்த "மெக்கானிக்"குகள் தங்கள் கார்களிலிருந்து கீழிறங்கி பள்ளிவாசலில் பணிவுடன் நுழைந்து 'கிப்லா'வை நோக்கித் தொழுது கொள்ளுகின்றனர். ஷெய்கு கூட்டத்தினரோ (இவர்கள் பணக்காரர்கள்) தங்களின் பழைமையான உடைகளைக் களைந்து விட்டு, நாகரிக உடைகளில் நன்றாகத் தங்களை அலங்கரித்துக்கொண்டு அமெரிக்காவிலே இரவில் நடக்கும் நடன அரங்குகளுக்கு ஆகாய விமானத்தில் ஏறிச் செல்லுகின்றனர்.

மன்னர் அப்துல்லா திருக்குர்ஆன் கூறுவதற்கிணங்க, எளிய வாழ்க்கையையே நடத்துகிறார். மதுபானத்தைக் கண்ணால்கூட பார்ப்பதில்லை. பழைய வீட்டிலேயே வசிக்கிறார். ஒவ்வொரு நாளும் பெரும் பகுதி நேரத்தை அவர் தமது நல்ல நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றுவதிலும், அவைகளைப்பற்றி நிபுணர்களுடன் விவாதிப்பதிலும் செலவிட்டு வருகிறார். இவர் உல்லாசமாகப் பொழுதுபோக்கும் நேரம் வாரத்தில் ஒரேயொரு நாள்தான். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் இவர் தமது நண்பர்களுடன் வளைகுடாவிலுள்ள ஒரு சிறிய தீவுக்குப் படகில் ஏறிச் செல்கிறார். இத் தீவில்தான் இவருடைய பழைய கோடைக்கால வசந்த மாளிகை இருக்கிறது. மறுநாள் மனமின்றி அம்மியற்ற நகருக்குத் திரும்பி வருகிறார்.

மன்னரின் வருமானம் மலை போல் பெருகியதற்கு ஒரு முக்கியக் காரணம் உண்டு. 1951-ல் இவருடைய வருமானம் ஒரு கோடி பவுன்கள். ஆனால் 1952-ல் அது 5 கோடியாக உயர்ந்துவிட்டது! ஈரானில் ஏற்பட்ட ஆங்கிலோ-ஈரானிய எண்ணெய்க் கம்பெனித் தகராறுதான் இதற்குக் காரணம்.

மன்னர் அப்துல்லா தமது வருமானத்தில் ஒரு கோடி பவுன்களை தமது ஒன்றரைக் கோடி மக்களின் நன்மைக்காகச் செலவிட்டார். அவர் தமது மிகை வருமானத்தைப் பாங்கியில் சேமித்து வைத்தார்.

இவ்வளவு வருமானத்தையும் எப்படிச் செலவிடுவது என்பது மன்னருக்கு ஒரு பெரிய பிரச்னையாகவே இருக்கிறது. மத்தியக் கிழக்குப் பிரதேசத்திலுள்ள மற்ற அரபு நாடுகளின் முன்னேற்றத்திற்காக அப்துல்லாவின் பெருநிதி செலவிடப்படவேண்டும் என்று கூறப்படுகிறது.

இத்தகைய பொதுநிதியொன்றை நிர்வகிப்பதில் பலவித மான கஷ்டங்கள் ஏற்படக்கூடும். அரபு நாடுகளிடையே ஒற்றுமை ஏற்படுவது அருமையாகவே இருக்கிறது. ஆனால் அவர்களிடையே ஒரே மதமும் ஒரே மொழியும் இருப்பதால் அவர்கள் ஒரு பொதுவான பொருளாதார திட்டத்தின் மீது ஒன்றுபடுவது எளிதாக இருக்கலாம்.

இதில் வெற்றி பெறுவதற்குத் தலைவர்களிடையே தகுந்த அறிவும் ஆற்றலும் வேண்டும். குபேர செல்வம் படைத்த குவைதின் மன்னர் அப்துல்லா அல் சலீம் அல் சபஹ் அவர்களும் அத்தகைய அறிவாளிகளில் ஒருவராக இருந்தாலும் இருக்கலாம். யாருக்குத் தெரியும்? குவைதின் மண்ணிலே குவலயம் தொழும் எண்ணெய் இருந்ததை, 20 ஆண்டுகளுக்கு முன் யார் கண்டார்கள்?

—o—


ஒவ்வொருவர் இல்லத்திலும் இருக்கவேண்டிய
இணையற்ற பொக்கிஷம்.

தர்ஜுமதுல் குர்ஆன்
தமிழ் மொழி பெயர்ப்பு

இம்மொழி பெயர்ப்பிலுள்ள விசேஷங்களாவன:

இதன் ஒவ்வொரு பதமும் உலமாக்களின் கமிட்டியில் பரிசீலிக்கப் பெற்று அங்கீகரிக்கப் பெற்றுள்ளது.

வசனங்களின் கருத்தைத் தெளிவுபடுத்தும் பொருட்டு ஆங்காங்கு சில பதங்களை வளைவுக் கோடுகளுக்குள் 'ரோமன்' எழுத்திலும் மொழி பெயர்ப்பை 'ஆண்டிக்' எழுத்திலும் அச்சிடப் பெற்றுள்ளது. அவைகளைச் சேர்த்து வாசித்தாலும், விட்டு வசித்தாலும் வசன நடையில் சிதைவு ஏற்படாது.

மொழி பெயர்ப்பின் இடது புறத்தில் வசனங்களின் கருத்தும், அவைகளிலுள்ள படிப்பினைகளும் சுருக்கமான வார்த்தைகளில் குறிப்பிடப் பெற்றுள்ளன.

ஒவ்வொரு நாளும் திருக் குர்ஆன் திலாவத் செய்வதற்கு வசதியான விதத்தில், ஒவ்வொரு பக்கம் பூராவும் திருக் குர்ஆனின் வசனங்களை மிக்க அழகான அரபி எழுத்திலும், அதன் மொழி பெயர்ப்பை அதற்கு எதிர்ப் பக்கத்திலுமாக அச்சிடப் பெற்றுள்ளது.

சாதாரண திருகுர்ஆன்களைப் போல் வலது புறமிருந்தே ஆரம்பஞ் செய்து அச்சிடப் பெற்றிருப்பதால் அன்றாடம் ஓதுவதற்காக அரபி குர்ஆனை வாங்குவோர், அதற்குப் பதிலாக இதனையே வாங்கி ஓதுவதில் எத்தனையோ விசேஷப் பயன்கள் இருக்கின்றன வென்பதை அறிந்து கொள்ளலாம்.

அழகிய அச்சு! உயரிய ரெக்ஸைன் பைண்டு!! குர்ஆன் வேண்டும் இந்தியா, சிலோன் அன்பர்கள் ரூ. 15 முன்பணமாக அனுப்பவேண்டும். மலாயா ஆடர்களுக்கு முழு விலையும் முன்பணமாக அனுப்பவேண்டும்.

முதல் வால்யூம் விலை. ரூ. 12-0-0
இரண்டாம் வால்யூம் விலை. ரூ. 16-0-0

முஸ்லிம் முரசு
132, பிராட்வே, சென்னை-1




" இஸ்லாத்தின் மூலமாக அரேபியர் அழைத்துச் செல்லப் பட்டதைவிட அதிகமாக வேறெந்த சாதியாரும் நாகரிகத்தின் பால் அழைத்துச் செல்லப்படவில்லை "

# இஸ்லாமும் திருநபியும்

ஜ. மு. கமாலுத்தீன்

நீதியும், நேர்மையும், நன்னெறியும் நிலவிடாத காலம் அது. அறியாமை இருளில் சுழன்று, சுழன்று அதையே பரந்த உலக மென எண்ணி வாழ்ந்த மக்கள் கூட்டம். வாழ வகை தெரியாது; ஆனால் வாழ வைக்க முயற்சித்தவர்களை வசை பாடினர். பலம் பொருந்தியவர் பாங்குடன் வாழ முடிந்தது. ஆனால் ஏழைகளும், பெண்டிரும் வதைக்கப்பட்டனர். மது, மாது இவைகளின் மயக்கத்திலே புரண்டனர். மக்களாய்த் தான் பிறந்தனர்; ஆனால். மாக்களாய்த் திரிந்தனர்.

ஆறும் நூற்றாண்டிலே அரேபியா நாட்டின் வாழ்க்கைச் சரிதை இதுதான். நாகரிகங் கற்ற இன்றைய மக்கள் நினைக்கவும் இயலாத மாபாதகங்களைத் திற்கும் உறைவிடமாயிருந்த நாடு தான் அரேபியா.

ஆனால் அதே நாட்டின் இன்றைய நிலையைக் காணும் பொழுது, ஆச்சரியப்படுகின்றோம். எத்தனை மாற்றங்கள்! அக்கிரமம் அழிந்து, சாந்தியும் சமாதானமும் தழைத்துப் படர்ந்துள்ளது. வேதனை விளையாடிய இடத்திலே 'வீரியம்' வளர்ந்திருப்பதைப் பார்க்கின்றோம். ஆம்! சுருங்கக் கூறினால், அன்பு நெறியோடு கூடிய அறவாழ்க்கையை, இன்ப வாழ்க்கையாக இனிதே நடத்தி வருகின்றனர். உலகின் ஒரு மூலையிலே—பாலை நிலத்தின் மையத்திலே அமையப் பெற்ற ஒரு நாடு இன்று பசுஞ்சோலையெனப் பலரின் பார்வையையும் இழுத்து நிற்பதைக் காணுகின்றோம்.

இந்நிலைக்குக் காரணம் என்ன? உருவமற்ற ஆண்டவனை உள்ளன்போடு வணங்கி, ஒருவரையொருவர் தாழ்த்தாமல், ஒன்றே குலம் என்ற தத்துவத்தை உலகிற்கு உணர்த்திக் காட்டியதும், அன்பையே ஆதாரமாகக் கொண்டு வளர்ந்ததும், சகோதரத்துவத்தை உலகெங்கும் நிலைபெறச்செய்ததுமான "இஸ்லாம்" மார்க்கமேயாகும்.

" இஸ்லாத்தின் மூலமாக அரேபியர் அழைத்துச் செல்லப்பட்டதைக் காட்டிலும், அதிவேகமாய் வேறெந்த ஜாதியாரும் நாகரிகத்தின் பக்கம் அழைத்துச் செல்லப்படவில்லை."

இது தீனுல் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட ஒருவரால் கூறப்

பட்டதல்ல, ஹிர்ஷ் பெல்ட் என்னும் ஆங்கிலேயர், 'புதிய ஆராய்ச்சிகள்' என்னும் நூலில் இப்படிக் கூறுகின்றார்.

இது முற்றிலும் உண்மை. இவ்வுண்மையை மறுக்கவோ, அன்றி மறைக்கவோ முயலலாம் இஸ்லாத்தின் வைரிகள். ஆனால் இஸ்லாம் புரிந்த பணியின் காரணமாய்த்தான் உலகின் மூலைகளில் பாழடைந்து பதுங்கிக் கிடந்த எத்தனையோ நாடுகள் இன்று உலகின் கவனத்தைக் கவர்ந்துள்ளன.

"இஸ்லாம் புரிந்த பணி" என்று நாம் கூறும்பொழுது எம்பெருமானார் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆற்றிய அரும் பணியைத்தான் குறிப்பிடுகின்றோம், 'இஸ்லாம்' என்ற இனிய வார்த்தையைக் கூறுகின்றபோதே நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நினைவுதானே நமக்கு வருகின்றது!

ஏன்? அறிவோ, ஒழுக்கமோ, இரக்கமோ இல்லாத அரக்கர் கூட்டத்தினிடையே அறிவுப் பிரச்சாரம் செய்வதென்பது சுலபமான காரியமா? கல்லடியைக் கண்டு கலங்காமலும், சொல்லடியைக் கண்டு சோர்வடையாமலும், பகைவர் படைகளைக் கண்டு பயப்படாமலும், குறிக்கோளுக்காகப் போராடிய ஓர் உயரிய உத்தம தீர்க்கதரிசியை நாம் மறக்கத்தான் இயலுமா?

இஸ்லாம் என்றதும் சீறிப் பாய்ந்தனர்; சினம் பொங்கியெழுந்தனர். அதை வளர விட்டார்களா? இஸ்லாத்தின் அரிய கொள்கைகளென்னும் தேர்ந்தெடுக்கப்பட்ட விதைகளை மக்களின் உள்ள வயல்களிலே விதைத்து, தொண்டென்னும் தண்ணீர்ப் பாய்ச்சி, இஸ்லாமென்னும் சிறந்த மரத்தை வளரச் செய்ய வாழ்நாளையே அர்ப்பணித்த நாயகம் (ஸல்) அவர்களை நாட்டிலே நடமாடத்தான் விட்டார்களா? ஏசிப் பேசினர்; இண்டல் செய்தனர்; கேலிப் பேசினர்; அடித்து அச்சுறுத்தினர்; கொல்லவுந்தான் துணிந்தனர்! நாயகம் அவர்கள் அடைந்த கஷ்டங்கள், பட்ட தொல்லைகள், எதிர்ப்பட்ட ஏளனங்கள் எத்தனையோ! ஆனால் குறிக்கோளின் பாதையிலே குறுக்கிட்ட இத்தொல்லைகள் நாயகத்தின் பணிக்குப் பாதையடைத்து விடவில்லை. போராடினார்கள்! போராடினார்கள்!! போராடிக் கொண்டேயிருந்தார்கள்!!! வயது முதிர்ந்த போதும், வாழ்க்கையின் முடிவிடத்தின் எல்லையைத் தொட்ட போதுங்கூட எம்பெருமானாரின் அரிய தொண்டு முடிவு பெறவில்லை!

"எதிரிகள் சூரியனைக் கொண்டு வந்து வலக்கரத்தில் நிறுத்தினாலும், சந்திரனை இடக்கரத்தில் நிறுத்தினாலும், இஸ்லாமியப் பிரசாரத்தை நிறுத்தேன்!" என்று சூளுரை கூறி, எதிர்ப்பட்ட தொல்லைகளையெல்லாம் ஏற்றுக் கொண்டு பணி புரிந்ததன் காரணமாய்த்தான் இன்று இஸ்லாம் உலகிலே ஒளியும் பொலிவும் பெற்று விளங்குகிறது.

அறியாமைக் காரிருள்; எதிர்ப்புக் காற்று; இடி; மழை; கல்லும் முள்ளும் நிறைந்த காட்டுப் பாதை. இவற்றின் வழியேதான் புகுந்து, புகுந்து வந்து புத்துலகை நிர்மாணிக்கப் பாடுபட்டார்கள், நபிகள் பெருமான்.

நாயகமவர்கள் இஸ்லாமியப் பிரச்சாரம் செய்த இடத்திற்கும், ஏனையோர் தங்கள் மதத்தைப் பரப்பிய இடத்திற்கும் உள்ள வேற்றுமை எதைப்போலவெனில், சமவெளி நிலத்தைப் பண்படுத்திப் பயிரிட்டு பலன்பெறுவதற்கும், காடு முரடான காட்டு நிலத்தை வயலாக்கி எருப்பெய்து, நீரிறைத்து பயிர்செய்து பலன் காண்பதற்கும் படவேண்டிய கஷ்டங்களுக்கும் தொல்லைகளுக்கும், எந்த அளவுக்கு வேற்றுமையுள்ளதோ, அதைப் போல வேற்றுமையுண்டு.

ஆனால் அவர்களுடைய காற்பதாண்டுத் தொண்டு மிகப் பயனுடையதாயிருந்ததோடு மட்டுமல்ல; இவ்வுலகில் தோன்றிய எல்லா மதத் தலைவர்களைக் காட்டிலும், நபிகள் நாயகம் அவர்களை வெற்றிப் பாதையில் வெகுதூரம் செல்ல முடிந்தது.

நபிகள் நாயகம் (ஸல்) இஸ்லாமியப் பிரச்சாரம் செய்து வந்த போது ஒரு பக்கத்தில் யூத மதப் பிரச்சாரமும், கிறிஸ்து மதப் பிரச்சாரமும் நடை பெற்றுக் கொண்டுதானிருந்தன. ஆனால் அப்படிப்பட்ட பிரச்சாரங்கள் அரேபியாவிலே நடைபெற்று வந்ததெனினும் மக்களுடைய மனதிலே குறிப்பிடத்தக்க மாற்றமெதையும் விளைவித்து விடவில்லை.

"யூதர்களின் மதக் கொள்கையே நெடுங்காலமாக மதீனத்து மக்கள் செவியில், ஒலித்துக் கொண்டிருந்தன. ஆனால் அந்த அரப் நாட்டு தீர்க்கதரிசியினால் தோற்றுவிக்கப்பட்ட ஆத்மாவைக் கிளறிவிடக்கூடிய அரிய செயல்களைக் கேட்ட பின்னரே, தங்களுடைய ஆழ்ந்த உறக்கத்தினின்று விழித்தெழுந்து, ஊக்கமுள்ள உயிர் வாழ்க்கையின் பக்கம் திடீரென்று குதித்தெழுந்தார்கள்" என்று மூயர் என்ற ஆங்கில சரித்திராசிரியர் கூறுகின்றார்.

இது உலகில் தோன்றிய எத்தனையோ தீர்க்கதரிசிகளின் செயல்களைக் காட்டிலும், போற்றத்தக்க சாதனையாகும்.

இஸ்லாத்தின் வளர்ச்சியைக் கண்டு ஆச்சரியப்படும் மக்கள் சிலர் "இஸ்லாம் வாள் வலிமையினால் வளர்ந்தது" என்று தவறாக நினைக்கின்றனர்.

இஸ்லாத்தின் தங்கு தடையில்லாத வளர்ச்சி கண்டு பொறாமைக் கொண்ட சரித்திராசிரியர்கள் சிலர் இப்படியெல்லாம் எழுதி வந்தனர்; இப்பொழுதும் சிலர் எழுதி வருகின்றனர்.

இதில் மிகவும்வருந்தத்தக்கது பள்ளிப் புத்தகங்களிலே இஸ்

லாத்தின் வளர்ச்சிக்கு ஒரு தப்புக் காரணம் காட்டி எழுதி இளைஞர்களின் உள்ளத்திலே இம்மதத்தின் மீது தப்பெண்ணம் தோற்றுவிக்க முயலும் அக்கிரமச் செயலாகும்.

* * *

ஒரு முறை நாயகம் (ஸல்) அவர்கள் தன்னந்தனிமையாக, திறந்த வெளியிலே, அயர்ந்து உறங்கி விட்டார்கள். அப்போது வஞ்சக எண்ணங்கொண்ட என்னும் எஹூதி ஒருவன் வருகின்றான். அவ்வழியில் தன்னுடைய பரம வைரியான நாயகம் அவர்களைக் கண்ட அவன், சமயம் செய்த உதவியைப் பயன்படுத்திக் கொள்ள நினைக்கின்றான். உருவிய வாளுடன் பாய்ந்தருகில் சென்று, கழுத்திலே கத்தியை வைத்து, "ஓ! முஹம்மதே! இப்பொழுது உம்மை யார் காப்பாற்றமுடியும்" என்று ஏளனங் கலந்த குரலில் அதட்டிக் கேட்கின்றான். ஆனால் நாயகம் (ஸல்) அவனுடைய மிரட்டலைக் கண்டு அஞ்சிடவில்லை. மிகவும் நிதானமாக, பொறுமையாக "ஆண்டவன் என்னைக் காப்பான்" என்று அழுத்தந் திருத்தமாக விடைகூறினார்கள். எதிரியின் கத்தி கழுத்திலேயிருந்தபோதும், ஆண்டவன் மீது வைத்திருந்த ஆழமான நம்பிக்கை அவர்களை விட்டுச் சிறிதும் அகலவில்லை!

எம்பெருமானாரின் அப்பழுக்கில்லாத ஆண்டவன் பக்தியையும், மனோதிடத்தையுங் கண்ட அந்த எஹூதி, அப்பதிலைக் கேட்ட வுடனே கலங்கிவிட்டதோடு மட்டுமல்ல, அவனையறியாமலே கையிலிருந்த வாள் கீழே நழுவியது. அவ்வாளை உடனே கைப்பற்றிய நாயகம் (ஸல்) அவர்களால் அந்த எஹூதியைச் சுலபமாகக் கொன்றிருக்கமுடியும். ஆனால் தன்னைக் கொல்லவுந்துணிந்த அக் கொடியோனை மனதார மன்னித்தார்கள். அந்த எஹூதியே பின்னர் சுயமே இஸ்லாத்தில் சேர்ந்து, இஸ்லாத்தின் வளர்ச்சிக்கு அரும்பணியாற்றியதாக வரலாறு கூறுகின்றது.

இது நாயகமவர்களின் வாழ்க்கை வரலாற்றிலே ஒரு ஏடு. இதைப்போல் எத்தனையோ நிகழ்ச்சிகள் அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றிலே ஒளிருகின்றன.

இவ்விதமே நாயகமவர்கள் மீது கொண்ட பொறுமையின் காரணமாயும், இஸ்லாத்தின் உயர்ந்த கொள்கைகளை உணராததாலும் முதலில் நாயகம் (ஸல்) அவர்களைக் கொல்லவுந்துணிந்த எத்தனையோ பேர் பின்னர் அத்தியந்த நண்பர்களாக மாறினார்கள்; சுயமே இஸ்லாத்தில் சேர்ந்தனர். இப்படியே அன்பின் அடிப்படையில்தான் இஸ்லாம் வளர்ந்ததாக உண்மைச் சரித்திரங்கள் சான்று கூறுகின்றன.

---





# ஷாஜஹான் மஸ்ஜித்

ஏ. எம். அலீ

ஆத்மீக உயர்வைப் புறக்கணித்து, நவ நாகரிகத்தில் மூழ்கிக் கிடக்கும் ஐரோப்பியர்களின் மத்தியிலே மெய்ஞ்ஞானக் கதிர் பரப்ப மெதுவாக எழும் இஸ்லாமியத் தினகரனுக்கு முன் தோன்றும் விடி வெள்ளிதான் இந்த அல்லாஹ்வின் இல்லம். உலகத்தின் எல்லாத் திசைகளிலிருந்தும் இலண்டனுக்கு வரும் ஒவ்வொரு முஸ்லிமும் ஷாஜஹான் மஸ்ஜிதுக்குச் சென்று ஆத்மீக உணர்வு பெறாமல் திரும்புவதில்லை.

லண்டனில் இரவுக் காட்சி ரம்யமானது. கோடிக்கணக்கான 'பல்பு'களின் நிலா ஒளியிலே, அந்நகர் உறங்குவதுமில்லை, விழிப்பதுமில்லை. பிக்கா டில்லி சர்க்கஸ், ஆக்ஸ்போர்டு சர்க்கஸ், சேரிங் கிரஸ் ரோட், ட்ரபால்கர் சர்க்கஸ், ரீஜண்ஸ்டிரீட், சால்ஸ்பரி அவென்யூ முதலிய இடங்கள் இரவுக் காட்சிக்குச் சிறந்தவை. வர்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டுள்ள வர்த்தக நிலய 'போர்டு'கள் பிரம்மாண்ட அளவில் அங்கெல்லாம் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவை புரியும் ஜாலவித்தைகளின் முன்னே ஜனத்திரளே தேங்கி விடுகிறது, சிவப்பு வர்ணம் பூசப்பட்ட அழகான பஸ்களின் மாடியிலே அமர்ந்து அந்த அற்புத நகரின் இரவுத் தோற்றத்தைக் காண்பது 'டூரிஸ்ட்'களுக்குச் சுலபமான வழி. பஸ்களும் இரவு முழுதும் நகரின் பிரதான பாகங்களில் ஓடுகின்றன. 'கண்டக்டர்'கள், லண்டன் போலீஸாருக்கு நிகராக மக்களிடம் மரியாதையுடன் நடந்து கொள்ளுகின்றனர். வெளி நாட்டினர் என்றறிந்தால் இன்னும் அதிக மரியாதை செய்கின்றனர்.

ஆங்கிலேயன் முதன் முதலில் ஒரு வியாபாரி. இதற்கு அடுத்தபடியாகத்தான் மற்ற உணர்ச்சிகளெல்லாம். லண்டனின் வியாபாரச் செழுமை கவர்ச்சி மிக்கது. உலகையே ஒரு சமூகமெனக் கற்பனை செய்து கொண்டால், லண்டன் அதிலே ஒரு பெரிய 'சந்தை'யின் பொறுப்பை வகிப்பதை அறியலாம். ஸ்டர்லிங் சுரங்கமான அந்தப் பெரிய நகருக்கு உலகின் பல பாகங்களுடனும் வரவு செலவு செய்ய வாய்த்துள்ள வசதிகள், 'டாலர் அமெரிக்கா'வுக்கு அடுத்தபடியாக—வேறெந்த நாட்டிற்கும் அவ்வளவு சுலபமாக இல்லை.

வெள்ளை மாளிகை என்றொரு வர்த்தகக் கோட்டை (WHITE HALL) ஆக்ஸ்போர்டு ரோடில் அமைந்திருக்கிறது. இதன் பிரம்மாண்ட அமைப்பை நினைத்தாலும் நெஞ்சம் சிலிர்க்கிறது. பூமிக்குள் உள்ள சுரங்கத்திலும், அதற்கு மேலுள்ள ஆறு மாடிகளிலும் எண்ணரிய பொருட்கள் நிறைந்திருக்கின்றன. உள்ளே நுழைந்தால், சிறிய பட்டணத்தில் நடமா

டும் உணர்ச்சியே மேலிடுகிறது. சுற்றிலும் அமைந்துள்ள பல டஜன் கதவுகளின் வழியே ஆயிரக் கணக்கான மக்கள் உள்ளே சென்றும், வெளியேறியவாறுமிருக்கின்றனர்.

ஆறுயிரம் மைல்களைக் கடந்து வரும் இந்தியரை உணவு விஷயத்திலும் திருப்தி செய்வது ஐரோப்பாவிலேயே உள்ள ஒரே ஒரு நகரம் லண்டன்தான். இரண்டு டஜன் வரை இந்திய உணவு விடுதிகள் இருக்கின்றன. வீராசாமி ஹோட்டல் சிறப்பானது. இதன் முதலாளி ஒரு ஐரோப்பியர். பதார்த்தங்கள் மதருஸ் 'மாடலி'ல் தயாராகின்றன. இந்தியக் கலைச் செல்வங்களை ஆதாரமாகக் கொண்டு தீட்டப்பட்ட ஓவியங்களும் வெண்கலக் கூஜாக்களும் காட்சியளிக்கின்றன. பச்சை, சிவப்பு, ஊதா, மஞ்சள் வர்ணங்களில் தலைப்பாகைகள் அணிந்து வெற்றுப் பாதங்களோடு அங்குமிங்கும் அலையும் பரிசாரகர்கள் 'சலாம்' செய்கின்றனர். உணவு வகைகள் அச்சிடப்பட்டிருக்கும் "மெனு" (MENU)வை ஒரு பணியாள் என்னிடம் தந்துவிட்டுப் பதிலுக்குக் காத்திருந்தார். "தமிழ் பேசத் தெரிந்த 'செர்வர்' இருப்பின் முதலில் அனுப்பு" என்றேன். இந்த ஆர்டரை அவர் எதிர் பார்க்கவில்லை. மறுகணம், தமிழர் போன்ற ஒரு மலையாளி என் முன் வந்து நின்றார். இந்தியாவில் எத்தனை மொழிகள் உண்டோ, அவை ஒவ்வொன்றையும் பேசக் கூடிய பணியாள் வீராசாமி ஹோட்டலில் இருப்பதும் விசேஷம்தான். ஆங்கிலேயரில் பலரும் அங்கே குடும்ப சகிதமாகக் குழுமியிருக்கின்றனர். ஆவி பறக்கும் கோழி பிரியாணி 'பிளேட்டை'க் 'காலி' செய்வதற்காக கத்தி, முள் கரண்டிகளைக் கையிலேந்தும் போதெல்லாம் இந்தியாவையும் அவர்கள் நினைத்துக்கொள்வார்கள் போலும்!

## இந்தியா மியூசியம்

இங்கே கச்சிதமான கண்ணாடிப் பெட்டிகளுள் அநேக இந்தியக் கலைப் பொருள்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன. கல்வெட்டுக்கள், காஷ்மீர், சூரத் பட்டுகள், அரசரின் போர்க்கருவிகள்,



ஷாஜஹான் மஸ்ஜித், வோக்கிங்



தளவாடங்கள் இப்படிப் பலவும் காணப்படுகின்றன. சீக்கிய மன்னரொருவரின் பசுந் தங்கத்தினாலான சிம்மாசனமொன்றும் குறிப்பிடத்தக்கதாக அங்கேயிருக்கிறது. சுவர்களில் உள்ள பல படங்களில் குறிப்பிடத்தக்கவை அமீர் ஹம்ஜா ஜங்க் கதைகளின் ஓவியங்களாகும். இதில் சேகரித்து வைக்கப்பட்டிருக்கும் கீழ் நாட்டுக் கையேட்டுப் பிரதிகள் அரியவையாகும்.

மியூஸியத்திற்குச் சமீபமாக இருக்கும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய மியூசியம் அவசியம் பார்த்து மகிழத்தக்கது.

தேம்ஸ் நதி தீரத்திலுள்ள பாராளுமன்றமும், வின்ஸர் கோட்டை, டவர் பிரிட்ஜ் முதலியனவும் லண்டனில் உள்ள அபூர்வமான இடங்கள்.

முடியரசு முத்திரையுடன் குடியரசுத் திட்டங்களை அமல் நடத்தும் லண்டனில், பக்கிங்ஹாம் அரண்மனையும் ஓர் அழகான மாளிகை. உருவிய வாளுடன் சிப்பாய்கள் காவல் புரியும் அதன் வாசல்களுக்கும் அப்பால் விநோதமான கதைகள் எத்தனையோ உருவாகி, சரித்திர ஏடுகளிலே பதிவாகிவிட்டன. "எதனை அடிப்படையாக வைத்து இலட்சிய வாழ்க்கை நடத்த நீங்கள் விரும்புகிறீர்களோ, அந்த ஜீவாதார உரிமையை எனக்கு வழங்க மறுக்கப்படுவதாலேயே இந்த மாளிகையையும் அரசி பதவியையுமே துறக்கின்றேன்..." எனக் கூறி வெளியேறிய எட்டாம் எட்வர்டின் காதல் இலக்கியமும் பக்கிங்ஹாம் அரண்மனை உலகுக்களித்த நவீனங்களில் ஒன்று!

லண்டனில் ஏழைகள் வதியும் பகுதி "வைட்டல் ஷேப்பல்" எனப்படுவது. நம் நாட்டைப் போல் அங்கும் பிச்சைக்காரர்கள் உண்டு. ஆனால் வெகு அபூர்வமாகக் காணப்படுகின்றனர். வீட்டுக்கு வீடு ஏறி 'காவடி.' தூக்குவதில்லை. யாசிப்பதைக்கூட அந்தப் பிச்சைக்காரர்களும் ஒரு கலையாகவே கருதுகின்றனர். இரவு சூழ்ந்து வெகு நேரமானபின் தள்ளுவண்டியில் அமைக்கப்பட்ட மெக்கானிக் மணியோசை வாத்தியத்தை இயக்கியவாறு தெருக்களில் தொண்டை கிழியப் பாடுகின்றனர். மாடிகளிலும் ரோடுகளிலும் கூடி நின்று வேடிக்கைப் பார்ப்போர் வீசும் 'பென்னி'களைப் பொறுக்கிக் கொள்ளுகின்றனர்.



கான்பகதூர் குலாம் ரப்பானி கான், டாக்டர் S. M. அப்துல்லா M.A., ஏ. எம். அலி, மாணவர் யூசுப்

பாரிஸிலுள்ள பாதாள ரயில்களைப்போல வேகமாக செல்லாவிடினும் லண்டன் 'அண்டர் கிரவுண்ட்' ரயில்கள் மிகவும் சுத்தமாக இருக்கின்றன. ஐரோப்பியரின் அற்புத சாதனைகளில் இந்த ரயில்வேயும் ஒன்று. பூமிக்குள்ளே இருக்கும் ஸ்டேஷன்கள் வர்த்தக நிலையங்களின் விளம்பரங்களால் நிறைந்திருக்கின்றன.

## ஞான விடிவெள்ளி

லண்டனில் உள்ள வாடர்லூ ரயில் நிலயத்திலிருந்து வண்டியேறி அரை மணி நேரத்தில் வோகிங் என்ற சிற்றூரை அடைந்தேன். ரயில் ஊருக்குள் நுழைகையிலேயே பசுமை வாய்ந்த ஒரு தோட்டத்தின் நடுவில் 'ஆயிரத்தோரிரவு'க் கதைகள் கூறும் கனவுலகத்திற்கு இழுத்துச் செல்லும் கலைப் பொலிவுள்ள சின்னஞ்சிறு 'ஷாஜஹான்' மஸ்ஜித் காட்சி தந்தது. வானோங்கிய கட்டிடங்களால் நிறைந்த இங்கிலாந்து முழுவதிலும் புதுமை வாய்ந்த ஒரு சிற்பத் திறனைப் பிரதிபலிக்கும் ஒரே சின்னம் அதுவாகத்தான் இருக்க முடியும். முத்துப் பருக்கைகளைப் போன்ற பனித் திவலைகளை வாரிக் கொட்டும் இங்கிலாந்தின் தெள்ளிய நீலவானடியிலே, நீண்டு வளர்ந்த 'சேபின்' மரங்களுக்கும், மாணிக்கங்களை வாரிக் கொட்டினாற் போல பூத்துக் குலுங்கும் மலர்க்கொடிகட்கும் நடுவினிலே ஜோதியை எழுப்பும் அந்த அல்லாஹ்வின் வீடு—இயந்திர சாதனங்களால் முன்னேற்ற மடைந்துவிடினும், நாகரிகப் போர்வைக்குள்ளே ஆத்மீக உயர்வைப் புறக்கணித்து உறங்கிக் கிடக்கும் ஐரோப்பிய சமூகத்தில் ஞானக்கதிர் பரப்ப மெதுவாக எழும் இஸ்லாமியத் தினகரனுக்கு முன்தோன்றும் விடிவெள்ளி எனக் குறிப்பிடலாம். அதைக்கண்ட மாத்திரத்தில் சோர்வுற்ற என் உள்ளத்திலே மகிழ்ச்சியும் பேரார்வமும் கிளர்ந்து எழுந்தன.

போபால் நவாபின் பொருளுதவியைக் கொண்டு, பஞ்சாப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் ரிஜிஸ்டிராரான ஹென்றி லெய்னர் (Henry Leitner) என்பவரால் இந்திய—அரேபிய சிற்பக் கலையின் பிரதிபலிப்பாக 1889-ல் கட்டப்பட்ட 'ஷாஜஹான்' மஸ்ஜித் அல்ஹாஜ் காஜா கமாலுத்தின் (மர்ஹூம்) அவர்களால் திறந்துவைக்கப்பட்டது. உலகின் எந்தக் கோணத்திலிருந்தும் லண்டனுக்கு வரும் ஒவ்வொரு முஸ்லிமும் 'ஷாஜஹான்' மஸ்ஜிதுக்கு வந்து ஆத்மீக உணர்வு பெறாமல் செல்வதில்லை.

இதற்கடுத்தாற்போல் ஸாலார் ஜங் பஹதூர் மாளிகையில்தான் 'ஷாஜஹான்' மஸ்ஜிதின் இமாம் வசிக்கிறார். "இஸ்லாமிக் ரிவ்யூ" என்ற சிறந்த கலைஞானத் திங்கள் வெளியீட்டின் அலுவலகமும் இங்கேதான் இருக்கிறது.

பத்திரிகை நிலயத்தில் நுழைந்து "ஸலாம்" என்றதுமே, ஏதோ கவலமாக எழுதிக்கொண்டிருந்த ஒரு பெரியவர் ஓடோடியும் வந்து என்னைக் கட்டிப் பிடித்துக்கொண்டார்! அவர் தம்மை கான் பஹதூர் குலாம் ரப்பானி கான், பி. ஏ., பி.எல். என்று அறிமுகப்படுத்திக்கொண்டார். சற்று நேரத்தில் மஸ்ஜிதின் இமாமாகவும், பத்திரிகையின் கூட்டாசிரியர்களில் ஒருவருமான டாக்டர் எஸ். எம். அப்துல்லாஹ், எம். ஏ., அவர்களும் அங்கே வந்து சேர்ந்தார்கள். அன்பும் ஆர்வமும் இழைந்து நின்ற அவர்களின் உபசாரமும், அறிவு செறிந்த உரையாடலும் மறக்கற்பாலதன்று.

நன்கு பழுத்த ஒரு ஆப்பிள் பழம். ஆனால் அதன் அரைப் பாகத்தைத்தான் கடித்துச் சாப்பிடலாம். இன்னொரு பகுதி அழுகல் மயமானது! ஐரோப்பிய சமூகமும் இந்த நிலையில்தான் இருந்து வருகிறது. இயந்திர அபிவிருத்திகள், கல்வி ஆராய்ச்சிகளில் அசாத்திய முன்னேற்றங்கள், சமுதாயக் கட்டுப்பாடு, மரியாதை இத்துறைகளில் அது நன்கு தேறிவிட்டது. கனியின் நல்ல பாகம் இது. மதுப்பழக்கம், சூதாடல், வெறிப்போர் புரிதல்; நிறத்தால், இனத்தால் ஏற்றத் தாழ்வுகள் காணும் இழிசெயல், இன்னும் பல காரியங்கள் ஐரோப்பிய ஆப்பிள் கனியின் அழுகிய பாகம். ஒழிக்கப்பட வேண்டிய செயல்கள் இவை. செய்வது, செய்யத்துணிவது யாரிந்த உலகில்? தீனுல் இஸ்லாத்தின் தீபத்தை வலக்கரத்திலே தாங்கி உயர்த்தும் தைரியம் வாய்ந்த தகைமையாளர்களாலேயே இது முடியும். ஷாஜஹான் மஸ்ஜிதும், அதன் முஸ்லிம் இயக்கமும் இதைச் செய்யவே அந்த ஆங்கில பூமியில் வேரூன்றியிருக்கின்றன.

"எங்கள் இயக்கம் பார்வைக்குச் சிறியதாகத் தோன்றலாம். அதன் தொண்டு உலகெங்கும் பரவியது" என்றார் டாக்டர் எஸ். எம். அப்துல்லாஹ். சந்தேகமென்ன? உயர்தரமான அரபிக் கிரந்தங்கள் இங்கே ஆங்கில மொழிபெயர்ப்பாக அச்சிடப்படுகின்றன. இஸ்லாத்தைத் தழுவ முன்வரும் மேனாட்டார்களின் மனத்தில் இதுவரை அறிந்திராத நெறிச்சுடரை இது பதியவைக்கிறது. டெலிவிஷன் பிறந்த தேசத்திலே, அணு ஆராய்ச்சி செய்யப்படும் நாடுகளிலே எங்கள் இஸ்லாம் பரவிக்கொண்டேயிருக்கிறது. வோகிங் மஸ்ஜித் இந்தப் பணியையே வெற்றிகரமாக நிறைவேற்றி வருகிறது. கொக்கரிக்கும் நம் நாத்திகர்களைவிட, ஆங்கிலேயர் ஆராய்ச்சியாளர் என்பதில் ஐயமில்லை. திருக்குர்ஆனை அவர்களும் தங்கள் வாழ்க்கைத்துணை நூலாகக்கொண்டு வருகிறார்களெனின், வேத புர்கானின் உயர்வுக்கு வேறு எடுத்துக்காட்டு வேண்டாம். தீன் நெறியை மேல்நாட்டில் பரப்புவதில் ஷாஜஹான் மஸ்ஜித்காரர்களுக்கு நிறையப் பங்கு உண்டு. இதையெல்லாம் அறிந்துதான், "இன்னும் ஒரு நூறு ஆண்டுகளில் உலகம் இஸ்லாம் மயமாகிவிடும்" என்று பேரறிஞர் பெர்னார்ட்ஷாவாலும் கூற முடிந்திருக்கிறது போலும்!

இஸ்லாத்தைப் பற்றி ஆங்கிலேயர் எழுப்பும் பிரச்னைகட்கு முறையாக பதிலளிக்கிறார்கள் வோக்கிங் மஸ்ஜித்காரர்கள். தூஷணைகளாகத் திட்டப்படுபவைகட்கும் தக்க பதில் அளிக்கிறார்கள். ஆகவே, ஆங்கில நாட்டிலே அல்லாஹ்வின் நல்லருளால் அந்த ஸ்தாபனமும் ஆணிவேர் பாய்ச்சி வளர்ந்தோங்கி வருகிறது.

வோக்கிங் மஸ்ஜிதிலே ஒரு பகல் இனிமையாகக் கழித்தேன், அங்கே தொழுகையையும் நிறைவேற்றி விட்டு விடைபெற்றுக் கிளம்பினேன். லண்டன் மாநகரிலே நான் கழித்த பதினைந்து தினங்களிலே ஆண்டவன் எனக்களித்த அதிர்ஷ்ட வசமான சந்தர்ப்பங்கள் பலவற்றில் இதை மிகவும் முக்கியமானதாகக் கருதுகிறேன்.

---

## முஹம்மது முஸத்திக்

ஜ. முஹம்மது அலி (ஹைபோங்) அவர்களுக்குப் புதுவையில் 22-12-52ல் ஒரு ஆண் குழந்தை பிறந்திருப்பதின் மகிழ்ச்சிக்குறியாக முஸ்லிம் முரசுக்கு ரூ. 10 அன்பளிப்பாக அனுப்பியிருக்கின்றார். குழந்தைக்கு முஹம்மது முஸத்திக் என்று பெயரிடப்பட்டிருப்பதாக அறிவிக்கப்படுகிறது.

# படித்துப் பாருங்கள்!

*

## வியாபாரம் செய்வது எப்படி?

[ஆசிரியர்: எம். ஆர். எம். அப்துர் ரஹீம். பிரசுரம்: யூனிவர்ஸல் பப்ளிஷர்ஸ், 155/156, அங்கப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1. விலை ரூ. 3]

"வாழ்க்கையில் வெற்றி" முதலிய மனித வாழ்வுக்கு இன்றியமையாத மிகச் சிறந்த நூல்களை எழுதி வெளியிட்டு, எண்ணற்ற தமிழ் மக்களின் இதயங்களுக்குப் புத்துணர்ச்சியும், புதிய நம்பிக்கையும் ஊட்டி, அவர்களின் வாழ்வு மலரச்செய்த ஆசிரியர் அப்துர் ரஹீம் அவர்கள் இந்த இணையற்ற நூலை எழுதி வெளியிட்டுள்ளார்.

வியாபாரத்தில் ஒருவர் வெற்றி பெறுவதற்குரிய அரிய யோசனைகளையெல்லாம், தக்க ஆதாரங்களுடனும் உதாரணங்களுடனும் இதன் ஆசிரியர் தமக்கே உரியதான இனிய தமிழ் நடையில் எடுத்துக் கூறுகிறார், உலகப் புகழ் வாய்ந்த கோடீஸ்வரன் ஹென்றி போர்ட் முதல், நம் சென்னையம் பதியிலே சிறந்து விளங்கும் 'ஹிந்து" பத்திரிகையின் சொந்தக்காரர் கஸ்தூரி ரங்க ஐயங்கார் வரையில், ஆரம்பகாலத்தில் கஷ்டப்பட்டு, "சிறுகக் கட்டிப் பெருக வாழ்ந்த' செல்வச் சீமான்கள் வரையில் எத்தனையோ பேர்களைப்பற்றிய ருசிகரமான செய்திகள் இதில் இருக்கின்றன. இவர்கள் ஒவ்வொருவரும் வர்த்தகத்தில் எப்படி வெற்றி பெற்றார்கள் என்பதைப் படிக்கும்போது, அவர்களைப்போல் நாமும் ஏன் முன்னுக்கு வரக்கூடாது என்ற கேள்வி நம் இதயத்தில் எழுகிறது; தன்னம்பிக்கையும் திடசித்தமும் தணியாத ஆர்வமும் நம்மை ஆட்கொள்ளுகின்றன.

இத்தகைய அரிய நூல் ஒன்றை தமிழ் மக்களுக்காக எழுதி உதவிய ஆசிரியரின் முயற்சி போற்றத்தக்கது.

வியாபாரிகள் மட்டுமின்றி மாணவர்களும், மற்றத் துறைகளில் ஈடுபட்டவர்களுங் கூட இதைப் படிப்பதில் இன்பமும், எதிர்கால வாழ்வில் ஏற்றமும் பெற்றுப் பெருமையும் புகழும் எய்துவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

'எஸ். ஏ'

## சந்நிதானம் அல்லது மூமினின் மிஃராஜ்

[ஆசிரியர்: அறிஞர் மு. கரீம் கனீ; கிடைக்குமிடம்: ரைஹானீ, C/o R. P. M. கனீ, பி. ஏ., பி. எல் 128, மூர் தெரு, சென்னை (1). விலை: 14 அணா.]

"தொழுகையானது, மூமினின் மிஃராஜ்' என்ற ஹதீதின் அடிப்படையில் தொழுகையை விளக்கும் ஓர் அரிய நூல், தொழுகைக்கும் ஆத்மீக வளத்திற்கும் உள்ள தொடர்பு மிக நன்றாக ஆராயப்பட்டிருக்கிறது. இதனைத் தமிழில் மொழிபெயர்த்தவர் ஜனாப் R. P. M. கனீ.

அரபி வாக்கியங்கள் ஏராளமாகக் கையாளப்படும் இந்நூலில், அங்குமிங்கும் பிழைகள் வருவது தவிர்க்கப்பட முடியாதவை. இருப்பினும் அவைகள் வாசகர்களைத் தவறாகப் படிக்கவோ, மனனம் செய்யவோ தூண்டுமாதலால், அவர்களுக்கு உதவும் முறையில் ...ழ்க் கண்ட முக்கியமான சில பிழை திருத்தங்களைக் குறிப்பிடுகிறோம். இடது புறம் பிழையும், அதன் எதிரேயே திருத்தமும் காணப்படும். பக்கம் (9) பலீலத்தவல் பலீலத்த :

வஸீல (த்) தவல் பலீல(த்)த

பக். 6—துர்ஸீனா—தூரிஸீனா

பக். 14, 16 : ஹப்துல் வரீத்—ஹப்லுல் வரீத்

பக் 23, வரி 17 : ஸித்லன்—ஸித்கன்

பக் 40—இபாத்திலாஹி—இபாதில்லாஹி

அஸ்ஸாமு—அஸ்ஸலாமு

பக் 49—ஆதஃனா—அதஃனா

பக் 52, 86 ஸிம்—ஸீன்

பக் 59 ஸபரஹன்—ஸபாஹன்

பக் 72 ஸூது—ஸூதூரி

பக் 74 வரி 26 ஆஃபுது—அஃபுது

பக் 88 ஸிராத்—அஸ்ஸிராத்

"ஹலரத் மூஸா (அலை) ஸீனா மலைக்குச் சென்ற பொழுது எழுபது சிஷ்யர்கள் இறைவனின் தஜல்லியைக் கண்டதும் மூர்ச்சையாயினர். ஆனால் மூஸா (அலை) மட்டும் மூர்ச்சையாகவில்லை. இந்த உபமானம் திருக் குர்ஆனில் கூறப்பட்டிருக்கிறது" என்று ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார். மூஸா (அலை) எழுபது சிஷ்யர்களுடன் நின்றார்கள் எனவே, அவர்கள் மட்டும் மூர்ச்சையாகவில்லை என்றோ இந்த சம்பவம் வரும் பகுதியில் ஸூரா(த்)து அஃராபில் இல்லை. குர்ஆன் ஷரீபின் இந்த ஸூரா வில் 143-ம் ஆயத்தில் தஜல்லியைக் கண்டதும் ஹலரத் மூஸா (அலை)வும் மூர்ச்சையானார்கள் என்றே கூறப்பட்டிருக்கிறது.

"இஸ்திஃபார்" என்பதற்குப் "பிழை பொறுக்கத் தேடுதல்" என்று பொருள் கொள்வது தவறு என்று ஆசிரியர் வாதிக்கிறார். "உங்கள் பாவங்கள் நோய்கள் ஆகும்; அவைகளுக்குரிய மருந்து இஸ்திஃபார் ஆகும்" என்ற நாயக வாக்கியத்திற்கு இது முரணாக இருக்கிறது.

ஆங்காங்கே ஆசிரியரின் சில கருத்துக்களை நாம் ஒப்பவில்லையாயினும், பொதுவாக இந்நூல் பயன் தரும் முறையில் எழுதப்பட்டிருக்கிறது என்பதை மறுக்க முடியாது. குறிப்பாக "நிய்யத்" பற்றி நவீன உபமானங்களுடன் ஆசிரியர் மிக அழகாக எழுதியிருக்கிறார்.

"இஸ்திகாரா" தொழுகையைப் பற்றி அறிஞர் கரீம் கனி எழுதியிருப்பது அவர் அனுபவத்தில் கனிந்த எழுத்து என்று கருதுகிறோம். ஆசிரியருக்கு ஹதீது, தலீல் ஆகியவற்றிலுள்ள ஈடுபாடும், புலமையும் இந்நூலிலிருந்து புலனாகின்றன; அவரது சுயசிந்தனையின் பொலிவும், ஆராய்ச்சிப் பெருக்கும் பல இடங்களில் தெளிவாகின்றன.

கண்ணால் காண்பதுவே மெய், மற்றவைகளைப்பற்றி சிந்திப்பது பகுத்தறிவு அல்ல என்ற ஒரு மூட நம்பிக்கை பரவி வரும் இக்காலத்தில்—லோகாதயச் சுழலில் சிக்குண்டு, ஆத்மீகச் சிறப்பை மனிதன் மறந்து வரும் இந்நாளில்—ஆத்மீகப் பெருண்மைகளை எடுத்துரைக்கும் பல நூற்கள் வெளிவரவேண்டும். அந்தப் பட்டியலிலே ஜனாப் கரீம் கனி அவர்களின் இந்நூல் நல்ல இடம் பெறுகிறது. சுய சிந்தனையின் பயனையும், ஆராய்ச்சியின் அழகிய விளைவுகளையும் பொதிந்து நிற்கும் இந்நூலை உளமார வரவேற்கிறோம்.

சிறந்த இந்நூலை, குறைந்த விலையில் வெளியிட்டிருக்கும் நோக்கத்தை உரிய முறையில் தமிழகம் பயன்படுத்திக் கொள்ளும் என எதிர்பார்க்கிறோம்.

"எம். ஏ."

## நாஸ்திகம் நல்லதா? கெட்டதா?

[ஆசிரியர்: 'விவேகி'. விலை அணா 6. வெளியிடுவோர்: திராவிடக் கலா நிலயம். 57, முக்தாருன்னிஸா பேகம் தெரு, சென்னை-2]

இஸ்லாம் உள்பட எல்லா மதங்களையும் வேதங்களையும் ஆராய்ந்து கரைகண்டவர்போல், இதன் ஆசிரியர் தமது சிற்றறிவுக்கு எட்டியவரையில் "நாஸ்திகம் நல்லதா? கெட்டதா?" என்று ஆராய்ச்சி செய்து இச் சிறு நூலை வெளியிட்டுள்ளார். சூரியன், சந்திரன், நட்சத்திரங்களைப்பற்றிக் குர்ஆன் கூறியிருப்பதற்கும் விஞ்ஞானிகள் சொல்லியிருப்பதற்கு மிடையேயுள்ள வேற்றுமையைச் சுட்டிக்காட்டி, விஞ்ஞானந்தான் மெய், வேதங்கள் பொய் என்பதாக இதன் ஆசிரியர் கூறத் துணிகின்றார். ஆனால் விஞ்ஞானிகள் எதைத்தான் திட்டமாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள்? அவர்கள் கண்டவைகளெல்லாம் முடிந்த முடிவுதானா? அவர்கள் தங்கள் ஆராய்ச்சியின் எல்லையை அடைந்து விட்டார்களா? சூரியனைவிட நட்சத்திரங்கள் எத்தனை மடங்குபெரியவை என்று அவர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள்? பூமிக்கும் சூரியனுக்குமிடையே எவ்வளவு தூரம் இருப்பதாக அவர்கள் இயம்புகிறார்கள்? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் "விவேகி" யார் தமது ஆராய்ச்சியில் விடை கண்டுபிடித்துக் கூற முடியுமாயின்; நாமும் வேதங்கள் கூறுவது மெய்யா, அல்லது விஞ்ஞானிகள் கூறுவது பொய்யா என்பதை விளக்கிக் கூறமுடியும். நுனிப்புல் மேய்கிறவர்களின் குறுமதிக்கு இந்த நூல் ஒரு உதாரணமா என்று சுருக்கமாகக் கூறிவிடலாம்.

## குறள் மணி

[மாத வெளியீடு. விலை அணா 3. ஆசிரியர்: V. P. சரவணம், ஆண்டுக் கட்டணம் ரூ. 2-2-0, 14, திருவேங்கட நாய்க்கன் தெரு, சென்னை-2.]

இதன் 4-வது இதழில் தமிழ்ப் பெரியார் திரு. வி. க அவர்கள் வரைந்த பாராட்டுரை பிரசுரமாகியுள்ளது. அதில். "பொருந்திய சொற்களும் திருந்திய பொருள்களும், இன்ன பிறவும் குறள் மணியில் செறிந்து கிடக்கின்றன. இச் செறிவு, அறிவுக்கு ஆர்வந்தேடும் என்பதில் ஐயமில்லை" என்று தமிழ்ப் பெரியார் கூறுகிறார். "திருவள்ளுவர் இல்லறம்" எனும் பொருள்பற்றித் தமிழ்ப் புலவர் கு. மதுரை முதலியார் எழுதியுள்ள கட்டுரையில், இல்லறமே சிறந்தது என்ற வள்ளுவர் கூற்றுக்கு விளக்கமும் ஆதாரமும் தரப்பட்டிருக்கிறது.

## சம்மதமா?

[எழுதியவர் V. நூர் முஹம்மது. பிரசுரம் அறிவு மலர்ப் பதிப்பகம், கோவிந்தக்குடி போஸ்ட், கும்பகோணம் வழி. விலை ரூபாய் ஒன்று]

முன்னாள் "கதிர்" ஆசிரியராகிய ஜனாப் நூர்முஹம்மது அவர்களின் இச் சிறு கதைத் தொகுப்பில் நீக்கங்கு பந்தம், இடிந்த கோட்டை, மறுமலர்ச்சி, அதிர்ச்சி, அடிவானத்திற்கு அப்பால், காத்திருந்தேன், சம்மதமா? முதலிய தலைப்புகளுடன் பல சிறு கதைகள் இருக்கின்றன. இதில் உள்ள ஒவ்வொரு கதையிலும் முஸ்லிம் கதாநாயகநாயகிகளே வருகின்றனர். இஸ்லாமிய சட்ட திட்டங்களுக்குச் சார்பில்லாத, கருத்து வேற்றுமைக்கு இடமுள்ள சில விஷயங்களையும் ஆசிரியர் இதில் புகுத்தியுள்ளார் என்று இதைப் படிக்கும்போது சிலருக்குத் தோன்றக் கூடும். ஆனால் இதன் தமிழ் நடையும், சொற்றிறனும், கருத்தாழமும் கதைகளுக்கு மெருகூட்டுவனவாயிருக்கின்றன என்றால் மிகையல்ல. "எஸ். ஏ"

---




[ஒவ்வொரு நாளும் ஏராளமான அன்பர்கள் கேள்விக் கடிதங்கள் வரைகின்றனர். எல்லாருடைய கேள்விகளுக்கும் ஒரே இதழில் பதில் அளிப்பது எளிதல்ல. ஒரே கேள்வியை அநேக அன்பர்கள் கேட்கின்றனர். ஆகையால் பதில் அளிக்கப்படாத கேள்விகளை நாம் மதிக்கவில்லை என அன்பர்கள் தவறாக நினைக்கவேண்டாம் என்று தெரிவித்துக்கொள்ளுகிறோம்—ஆசிரியர்]

**M. K. முஹம்மது ஹனீப், ஊர்கம்.**

பல் தேய்க்கும் பிரஷ் எதனால் செய்யப்பட்டது என்று தெரிவிக்கவும். அதை ஒரு முஸ்லிம் உபயோகிக்கலாமா? என்பதையும் எழுதவும்.

பல் தேய்க்கும் பிரஷ் பன்றியின் மயிரால் செய்யபபடுவதாக சிலர் நினைக்கின்றனர். ஆனால் பன்றியின் உடம்பில் இத்தகைய மயிர் ஒன்றுங் கிடையாது. ஆகையால் பல் விளக்கும் பிரஷ், பன்றியின் மயிரால் செய்யப்பட்டது என்று சொல்லுவது தவறு. அது ஒருவகை நாரினால் செய்யப்படுவதாகத் தெரியவருகிறது. இதன் முழு விபரமும் தெரிவிக்குமாறு மேற்படி பிரஷ்கள் செய்யப்படும் தொழிற்சாலைகளுக்கு எழுதிக் கேட்கப்பட்டிருக்கிறது. பதில் கிடைத்தவுடன் அதைப்பற்றிய விளக்கமான சிறு கட்டுரையொன்று இதில் வெளியிடப்படும்.

**P. M. ஜமால் முஹம்மது, அய்யம்பேட்டை.**

நான் ஒரு பெண்ணைக் காதலிக்கிறேன். அது இஸ்லாத்துக்கு உகந்ததா?

விவாகமாகாத ஒரு பெண்ணை விரும்பிக் காதலிப்பது குற்றமல்ல. ஆனால் முறையாக அவளைத் திருமணம் முடித்த பின்புதான் அப் பெண்ணின் கிட்டே போகலாம்.

**S. S. A. K. தூயன், பட்டிகோலா, இலங்கை.**

சோவியத் ருஷ்யாவில உள்ள முஸ்லிம்களின் நிலையைப்பார்த்து வர விரும்பிய பாகிஸ்தான் தூது கோஷ்டியினருக்கு சோவியத் அரசாங்கம் அனுமதியளிக்க மறுத்தது ஏன்?

இரும்புத் திரைக்குள்ளே எல்லாரும் செல்ல வியலாது. அது கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் "கம்யூனிஸ்ட் சாதி"யைச் சேர்ந்த

வர்களாக இல்லை என்பது காரண மாக இருக்கலாம்.

**எஸ். ஐ. ரஜாக், ஈரோடு.**

*இந்திய சர்க்காரின் 5 வருட திட்டத்தின் முதல் சாதனை என்ன?*

திட்டக் கமிஷனைச் சேர்ந்த தேஷ்முக்—துர்காபாய் கலியாணம்!

**N. அப்துல் மஜீது, குண்டூர்.**

*பொட்டி ஸ்ரீராமுலு ஆந்திர மாகாணப் பிரிவினைக்காக 58 நாட்கள் உண்ணுவிரதமிருந்து உயிர்விட்டதால் அவர் கண்ட பலன் என்ன?*

அவர் ஒரு கடவுள் ஆகப்போகிருர்! ஆந்திரர்கள் அவருக்காக ஒரு கோயில் கட்டிக் கும்பிடப்போகிருர்கள்!

**M. K. முஹம்மது நெய்னு, முத்துப்பேட்டை.**

*குர்ஆனில் சொல்லப்பட்டிருப்பதெல்லாம் விஞ்ஞான ஆராய்ச்சிக்குப் பொருந்துமா?*

மனிதனின் அறிவு ஒரு எல்லைக்கு உட்பட்டதுதான். காற்று, மழை, மின்னல், இடி ஆகிய இயற்கைச் சக்திகளை மனிதன் தன் விருப்பத்துக்கு இணங்க இயக்குவிக்கும் சக்தியை இன்னும் பெறவில்லை. இதைப் போலவேதான் குர்ஆனின் உண்மைகளையெல்லாம் மனிதன் தனது விஞ்ஞான அறிவுக்குப் பொருந்தியதாகக் காணக்கூடிய ஆற்றலைப் பெறவில்லை. ஆதலால், குர்ஆனில் சொல்லப்பட்டிருப்பது எதுவும் விஞ்ஞான அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் பொருந்தவில்லை என்று சொல்லமுடியாது.

**V. S. அப்துல் ஷுக்கூர், விருதம்பட்டு.**

*பாக்கிஸ்தானின் மொத்த ஜனத்தொகை என்ன?*

ஏறத்தாழ ஏழுகோடி.

**M. O. செய்யது இஸ்மாயில், சென்னை.**

*முஸ்லிம்கள் இஸ்லாமிய சட்டப்படி வேஷ்டி உடுத்தலாமா? கூடாதா?*

ஒழுங்கான முறையில், மறைவாக இருக்கவேண்டிய மனித உறுப்புக்கள் வெளியே தெரியாத வண்ணம் உடுத்தலாம்.

**V. I. மஜீத்கான், பினங்கு.**

*வட இந்திய சினிமாவில் சிறந்த பின்னணிப் பாடகர்கள் யார்?*

முஹம்மது ரபீயும் தல்அத் முஹம்மதும் சிறந்து விளங்குகின்றனர்.

**N. K. S. ஜமாலுத்தீன், இராஜசிங்கமங்கலம்.**

*நரகமும் சுவர்க்கமும் உண்டு என்று சொல்லுகிறீர்களே, அது உண்மையா?*

நான் கண்டதில்லை! ஆனல் உண்மையென்று நம்புகிறேன். நரகமும் சுவர்க்கமும் உண்டு என்று நம்பினால்தான், நன்மையைச் செய்யவும் தீமையை விலக்கவும் மனிதன் முயற்சிப்பான் என்று எதிர்பார்க்க முடியும்.



**ஏ. அ. அப்துல் லத்தீபு, கொழும்பு.**

*இந்தியாவும் பாக்கிஸ்தானும் தனி நாடுகளாகப் பிரிந்தபின் எந்த நாடு அதிக முன்னேற்றம் அடைந்திருக்கிறது?*

இந்தியாதான் என்பதில் சந்தேகமில்லை. பாக்கிஸ்தான் இன்னமும் தனது புதிய அரசியல் சட்டங்களையே நிர்ணயிக்கவில்லை. ஆனல் இந்தியாவில் புதிய அரசியல் சட்டம் அமலுக்கு வந்து குடிஅரசும் உதயமாகிவிட்டது!

**K. அப்துல் ஜாமிவு, மோல்மெயின்.**

*மத்திய கிழக்குப் பாதுகாப்பு மண்டலத்தில் பாக்கிஸ்தான் சேர்ந்துகொள்ள விருப்பதைப் பற்றி ஏனைய இஸ்லாமிய நாடுகள் என்ன நினைக்கும்?*

இதைப் பற்றித்தான் இந்த இதழின் தலையங்கமே வரையப்பட்டுள்ளது. அதை ஊன்றிப்படித்தால் உங்கள் கேள்விக்கு பதில் கிடைக்கும்.

**H ரஷீத்கான், ஆத்தூர்.**

*எம். ஆர். எம். அப்துர் ரஹீம் எழுதிய "முஸ்லிம் சமுதாயச் சிற்பிகள்" என்ற நூலில் பாக்கிஸ்தானைத் தோற்றுவித்த ஜனப் ஜின்னுவைப்பற்றி ஏன் எழுதவில்லை?*

இதற்கு முன்பாக அவர் எழுதி வெளியிட்ட "இஸ்லாமிய திலகங்கள்" என்னும் நூலில் காயிதே ஆஸம் ஜின்னு(ஹ்)வை பற்றி விரிவாக எழுதியிருக்கிருர்

**A. E. முஹம்மது இஸ்மாயில், அபிராமம்.**

*ஐந்து வேளையும் அல்லாஹ்வைத் தொழுது கொண்டிருக்கும் ஒருவர், நல்ல பொழுது போக்கிற்காக சீட்டாட்டம் விளையாடலாமா?*

சீட்டாட்டம் ஒரு சிறந்த பொழுதுபோக்கு சாதனம் அல்ல. அது சூதாட்டத்துக்கு இடமளிக்கும். எனக்குப் பிரியமான நல்ல பொழுதுபோக்கு எழுதுவதும் படிப்பதுந்தான். குர்ஆனும் ஹதீதும் படிப்பதே மனிதர்களுக்குச் சிறந்த பொழுதுபோக்காகவும், வாழ்க்கைக்கு வழிகாட்டியாகவும் இருக்கும்.

**எம். ஏ. ஷஹாபுத்தீன், நொச்சியகம சிலோன்.**

*ஐக்கிய நாடுகளின் சபை முதன்முதலாக எங்கே, யாரால் கூட்டுவிக்கப்பெற்றது? அதில் எத்தனை நாடுகள் சேர்ந்துள்ளன?*

அமெரிக்காவிலே சான்பிரான்சிஸ்கோ நகரில், அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டின் முயற்சியால் கூட்டுவிக்கப்பெற்றது. இதில் 64 நாடுகளின் பிரதிநிதிகள் இருக்கின்றனர்.

**அ. முஹம்மது சாலிஹ், வேல்வார்க்கோட்டை.**

*நம் தென்னாட்டு முஸ்லிம்கள் சிலர் மா இலையில் அரபு எழுத்துக்களை எழுதி, அதைத் தண்ணீரால் கழுவிக் குடிக்கின்றனர். இப்படிக் குடிப்பதால் பாவமும் பிணியும் ஒழிந்து போகுமென்று நம்புகின்றனர். இந்த*

கைய செயலுக்கும் நம்பிக்கைக்கும் இஸ்லாத்தில் இடமிருக்கிறதா?

மூட நம்பிக்கையில் முதல்தரமானது; அறியாமையின் சிகரம். அனுஷ்டானத்தில்தான் இஸ்லாம் இருக்கிறது. வெளிவேஷத்தில் ஒன்றுமில்லை.

**மு. கா. மு. நய்னு முஹம்மது,**
**ஆனந்தூர்.**

*காலஞ் சென்ற தாதாபாய் நௌரோஜியவர்கள் ஹிந்துவா, முஸ்லிமா?*

பார்ஸீ வகுப்பைச் சேர்ந்தவர்.

**எம். அஷ்ரப் ஜலால்,**
**அத்திக்கடை**

*இந்தியாவில் கம்யூனிஸ்ட் கட்சியின் பலம் வலுத்துவிட்டால், இந்த நாட்டின் நிலை என்னவாகும்?*

சிவப்பாகிவிடும்!

**A. M. அப்துல் காதர், இராஜகிரி**

*நாம் இறந்தபின் எழுப்பிக் கேட்கப்படும் கேள்விகள் எந்த மொழியில் இருக்கும்? அவரவர் தாய்மொழியிலா, அல்லது அரபு மொழியிலா?*

அவரவருக்குத் தெரிந்த மொழியில். "ஆண்டவன் எல்லாம் அறிந்தவன்".

**P. G அப்துஸ் ஸமது,**
**குவாந்தன், மலாயா**

*1952-க்குக் குர்ஆன் பொருந்தாது என்று கூறிய நெடுஞ்செழியன் தமது வார்த்தைகளை வாபஸ் பெற்றுக் கொண்டாரா?*

வாபஸ் பெறவில்லை; வருந்துகிறார் 1953-ம் பிறந்து விட்டதால், அவரையும் மறந்துவிடுவோம். அவர் என்ன ஜார்ஜ் பெர்ணர்ஷோ போன்ற உலக மேதையா? வேண்டுமாயின், ஜார்ஜ் பெர்ணர்ஷோவே இஸ்லாத்தைப் பற்றி 20 ஆண்டுகளுக்கு முன் பெருமையுடன் கூறிய புகழ்மொழிகளை இன்னொரு இதழில் வெளியிடுகிறோம்; பார்த்துக்கொள்ளுங்கள்.

**ப. அஹ்மது, கண்டி, சிலோன்**

*ருஷ்யாவில் எத்தனைக் கோடி முஸ்லிம்கள் இருக்கின்றனர்?*

சுமார் மூன்று கோடி.

**N.P. அபூபக்கர், ஹட்டன், சிலோன்**

*'புயல்' படத்தில் நடிக்கும் ஜி. எம். குல்ஸார், G. M. பஷீரின் சகோதரியா?*

இல்லை, மனைவி!

**S. ரஜாக், விஜயபுரம்**

*ஆந்திர மாகாணம் தனியே பிரிந்துவிட்டால் திராவிட நாடு கோரும் பெரியாரும் அண்ணாதுரையும் என்ன செய்வார்கள்?*

இன்னும் தீவிரமாக திராவிட நாட்டுக் கிளர்ச்சியை நடத்துவார்கள்.

**S. N. முஹம்மது யூசுப், திருப்பூர்**

*ஆடு, கோழிகள் அறுக்கும் முஅத்தினை இமாமாக நிறுத்தி, அவர் பின்னால் நின்று தொழலாமா?*

தொழலாம்.

**எஸ். எம். பதுருத்தீன், தொடன்**
**கஸ்லந்த, இலங்கை**

*அந்நிய நாடுகளில் வாழும் இந்தியப் பிரஜைகள் தேர்தல் காலத்தில் தங்கள் விருப்பம் போல் யாருக்கும் ஓட்டளிக்க உரிமையுண்டா?*

ஓட்டுரிமை என்பது நமது பிறப்புரிமை. அதை நம் விருப்பம் போல் யாருக்கும் அளிக்கலாம்.

**S. P. அப்துல் ரஹீம், தேரிழந்தூர்**

*சென்னை ராஜ்யத்திலே ராஜாஜி உணவுக் கட்டுப்பாட்டை நீக்கியதால் பலன் விளைந்திருக்கிறதா?*

சென்னையில் அரிசித் தொல்லை அகன்றது. விலையும் குறைந்திருக்கிறது. ஆனால் வெளியூர்களில் நிலைமை நேர்மாறாக இருக்கிறது!

**R. A. அப்துர் ரஹ்மான்,**
**அத்திக்கடை**

*காஷ்மீர் பிரச்னை பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?*

காஷ்மீர் மக்கள் சுதந்தரப் பிரியர்கள். இந்தியாவுக்கோ, பாக்கிஸ்தானுக்கோ அடிமைகளாக இருக்க அவர்கள் விரும்பவில்லை.

**முத்து, மைசூர்**

*கமலா என்பவர் ஒரு ஹிந்துப் பெண். அவரை முஸ்லிம ஒருவர் மணக்கலாமா?*

விக்ரக ஆராதனை செய்கிற பெண்களை முஸ்லிம்கள் மணக்கக் கூடாது என்று குர்ஆனில் ஆண்டவன் கூறுகிறான். (குர்ஆன் 2:221)

**பு. மு. இப்ராஹீம், புனவாசல்**

*ஒரு முஸ்லிம் வாலிபனும் ஒரு கிறிஸ்துவப் பெண்ணும் விவாகம் செய்து கொள்வதை இஸ்லாம் அனுமதிக்கின்றதாயின், அவர்கள் இஸ்லாமிய முறையில் வாழ்க்கை ஒப்பந்தம் செய்ய வேண்டுமா, அல்லது கிறிஸ்துவ முறையிலேயே திருமணத்தை நடத்தலாமா?*

இஸ்லாமிய முறையிலேயே நடத்தவேண்டும்.

**ஜே. எம். மஹ்பூப்,**
**பொல்கொல்லை, சிலோன்**

*குத்பா பிரசங்கம் ஏன் மிம்பர் மீது இருந்து நடத்தப்படுகிறது?*

பிரசங்கம் செய்கிறவர்கள் உயரத்தில் நின்று உங்கள் கவனத்தைக் கவருவதற்கும், நீங்கள் தூங்கி வழியாமல் இருப்பதற்கும் தான்!

**S. ரஹ்மத்துல்லா, பொன்மலை**

*மக்காவுக்குச் சென்று ஹஜ்ஜு செய்து திரும்புகிற ஆடவர்கள் ஹாஜிகள் என்று அழைக்கப்படுகின்றனர். பெண்களை எப்படி அழைப்பது?*

பெண்களையும் ஹாஜி, அல்லது அல்ஹாஜ் என்றே அழைக்கலாம்.

**C. A. அப்துல் அஜீஸ், கொச்சி**

*அரசனும் ஆண்டியும் சமமானவர்கள் என்று சொல்லப்படும் இஸ்லாத்தில், ஏழை பணக்காரர் என்ற ஏற்றத் தாழ்வு மிக அதிகமாக இருப்பதற்கு என்ன காரணம்?*

இஸ்லாமிய சட்டதிட்டங்கள் முஸ்லிம் சமூகத்தில் சரியாகப் பின்பற்றப்படாததுதான் இதற்குக் காரணம்.

**K. முஹம்மது இஸ்மாயீல்**
**பேர்ணம்பட்டு**

*ஆண்டவனே இல்லை என்று கூறும் திராவிடக் கட்சித் தோழர்களுக்கு, ஆண்டவன் உண்டு என்று எப்படி நிரூபிப்பது?*

ஒவ்வொரு மனிதருக்கும் "ஆத்மா" என ஒன்று இருக்கிறது என்பதை நாம் உணருகிறோம். ஆனால், அதனைக் கண்ணால் காணமுடியவில்லை. "ஆத்மா"வைப் போலத்தான், உலகத்துக்கு ஒரு ஆண்டவன் உண்டு என்பதையும் உணர்ந்து ஒப்புக் கொள்ளுகிறோம்.

**அப்துல் முத்தலிப், ரவண சமுத்திரம்**

*சில பிரபல ஆங்கிலப் பத்திரிகைகளிலே குறுக்குவார்த்தைப் போட்டிகளில் ஒரு இலட்சம் ரூபாய் பரிசுத் தொகை என்று அறிவிக்கப்படுகிறது. இவைகள் நேர்மையான ஸ்தாபனங்களா? அல்லது மோசடி செய்யும் போட்டிகளுள் இவைகளும் சேர்ந்தவைகளா?*

சில பிரபல ஆங்கிலப் பத்திரிகைகள் நடத்தும் போட்டிகளும், R. M. D. C. போட்டியும் ஒழுங்காக நடத்தப்படுபவையாகவே தெரிகிறது. ஆனால் இவைகளில் இருபதினாயிரம் போர்களில் ஒருவருக்குத்தான் பெருந்தொகை பரிசாகக் கிடைக்கும். இதில் நாமும் ஒருவராக இருக்கலாம் என்று நினைத்து 19,999, பேர்கள் ஏமாறுவதுதான் இரங்கத்தக்கது!

**K.A.Z ஆபிதீன்; கோலாலம்பூர்**

*மனிதனுக்குச் சிறப்பைத் தரும் முக்கியமான குணங்கள் யாவை?*

தன்னடக்கம், தான் என்ற அகம்பாவமின்மை, ஏழைகளிடம் அன்பு, நண்பர்களிடம் மரியாதையுடன் பழகுதல், உறவினர்களை நேசித்தல் ஆகியவைகளே. மனிதருள் மாணிக்கமாக விளங்கிய நபி பெருமான் (ஸ்ல்) அவர்களின் கல்யாண குணங்களாயிருந்தன.


**வாஞ்சூர் K. S. & Co., வின்**
**நாகூர் சோகை மருந்து**




*இது சோகை, முகம் வயிறு வீக்கங்கள், தீராத பாண்டு, கைகால் குடைத்தல், தொண்டை புகைச்சல், கிராணிபோக்கு நாள் பட்ட ஜுரம், சூதகக் கட்டு, அஜீரணம், மேகநீர், கண்ணில் திடீரென ஏற்படும் மறைவு, முதலியவைகளை விரைவில் குணப்படுத்தி ரத்தவிருத்தியை உண்டாக்குகிறது.*

*பலராலும் போற்றப்படுவது.*

*10 நாள் சாப்பிடக்கூடிய பெட்டி 1-க்கு விலை 0-6-0*

*தயாரிப்பவர்கள் :—*

**வாஞ்சூர் K. S. & Co.,**

*49, மணிக்காரத்தெரு, கும்பகோணம்.*


**எஸ். எஸ். ஹமீது, விருதுநகர்**

*திருக் குர்ஆனுக்கும் நாயகத்தின் போதனைக்கும் இணங்க உலக நாடுகளின் அரசியல் நடைபெறுமாயின், பலவித அரசியல் கட்சிகளுக்குத் தேவையிருக்குமா?*

இஸ்லாமிய ஜனநாயகம் என்பது ஐரோப்பிய, அமெரிக்க ஜனநாயகத்தைப் போன்றதல்ல. அல்லது, "அரசன் தவறே செய்யமாட்டான்" என்ற ஆங்கில சித்தாந்தத்தை ஒப்புக்கொள்ளுவதல்ல. ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள் தவறு செய்தால், அக்கணமே அதிகாரப் பதவியிலிருந்து அவர்கள் அகற்றப்படுவார்கள். பல வருஷங்களுக்கு அதிகாரப் பதவியில் அட்டையைப்போல் ஒட்டிக் கொண்டு அக்கிரமம் செய்ய முடியாது. இஸ்லாமிய ஜனநாயகத்தில் அநேக அரசியல் கட்சிகளுக்கு அவசியமில்லை. சமூகத்திலுள்ள சிறந்த மனிதர்கள்தான் ஆட்சிப் பொறுப்பில் இருப்பார்கள்.

**A. ஜமால்தீன், வாழைச்சேனை,**

*முஸ்லிம்கள் தற்காலத்துக்கு ஏற்றபடி அன்னிய நாட்டவரின் நாகரிகத்தைப் பின்பற்றி நடக்கலாமா?*

முஸ்லிம்களுக்காகத் தனியொரு நாகரிகமும் பண்பாடும் இருக்கும்போது, மற்றவர் நாகரிகத்துக்கு அவர்கள் ஏன் அடிமையாகவேண்டும்?

**ஹபீபுல்லாஹ், எமனேஸ்வரம்**

*விவாகம் நடைபெறுமுன், மணமகளை மணமகன் பார்க்கலாமா?*

பார்த்தே விவாகம் செய்ய வேண்டுமென்று நபிபெருமான் கூறியுள்ளார்கள்.

**P. L. M. உமர், அம்மாபட்டணம்**

*கணவனை இழந்த பெண்கள் தூய வெள்ளை ஆடைகள்தான் உடுத்த வேண்டுமென்பது இஸ்லாமிய சட்டமா?*

இல்லை.

**M. அப்துல் கஃஹார், பொல்கொல்லை, சிலோன்**

*முஸ்லிம்கள் 'ஜியாரத்' செய்யலாமா? அதனால் பயனுண்டா?*

'ஜியாரத்' செய்யலாம். ஆனால் எந்த விதமான உதவியையும் ஆண்டவனிடம் கேட்பதை விட்டு, அவ்லியாக்களிடம் கேட்பதுதான் கூடாது.

**A. முஹம்மது தாவூது, விஜயபுரம்**

*இந்தியாவில் எப்போது உணவுப் பஞ்சம் ஒழியும்?*

ரபீ அஹ்மது கித்வாய் போன்ற செயல் திறமையுள்ளவர்கள் இன்னும் சில வருஷங்களுக்கு உணவு மந்திரியாகயிருந்தால், உணவுப் பஞ்சம் ஒழிந்துவிடும்.

**அ. கணேசன், திருவாரூர்**

*முஸ்லிம் முரசுக்குக் கதை எழுதுவதாயின், எத்தனைப் பக்கத்தில், எத்தகைய கதைகள் எழுதலாம்?*

6, 7 பக்கத்தில் அடங்கக் கூடியதாகவும், முஸ்லிம்களின் பழக்கவழக்கத்தையும் பண்பாடுகளையும் சார்ந்துள்ளதாகவும் இருக்கவேண்டும்.

—"கமால்"






இது 37 வருடங்களாக இந்தியா, பர்மா, சிலோன் மலேயா, இந்தோ—சைனு முதலிய நாடுகளில் கோடிக் கணக்கான மக்களுக்கு நிவாரணமளித்து நற்கியாதியுடன் தங்க மெடல்களும் நற்சாட்சிப் பத்திரங்களும் பெற்றது.

எல்லாவித படை, சொரிசிரங்கு, கக்கூஸ் பத்து, அரிப்பு, வண்டுகடி, புழுக்கடி, எச்சிற்றழும்பு, கரு நிறமுள்ள தடிப்பு, மேகப்படை முதலிய தோல் வியாதிகளை உடனே குணப்படுத்தும்.

பெரிய சைஸ் பாட்டல் ஒன்று அணு 12.

சிறிய „ „ „ அணு 6.

எல்லா கடைகளிலும் கிடைக்கும்.

தயாரிப்பவர்கள் :-

## ஜெயரசம் டிப்போ,

அய்யம்பேட்டை S. Ry.



# மயர்ஸ்




ஸெல்ப்-ஆயிலிங்
ஓர்க்கிங் ஹெட்டுகள்

★

எவ்வளவு ஆழமுள்ள கிணறுகளிலிருந்தும் போரிங்கிலிருந்தும் தண்ணீர் எடுக்கக் கூடியவை.

★

மற்றும் ஆட்டோமாடிக் வாட்டர் ஸிஸ்டம்கள் பல ஸைஸ்கள்

★

ஸோல் ஏஜண்டுகள் :

வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ் லிமிடெட்

45, தம்புசெட்டி தெரு — மதராஸ்-1.

# குதிரை மார்க்கு கைலிகள்




நயமான விலை -
உறுதியான சாயம் -
நீடித்த உழைப்பு -
நேர்த்தியான உடை

ஒவ்வொரு பீஸில் குதிரை மார்க் லேபிலும்
ஒவ்வொரு லுங்கியில் குதிரை மார்க் ஸீலும்.

**எங்கள் உத்திரவாதம்**

## நேஷனல் பளயகாட் கம்பெனி

விஜயபுரம் - - திருவாரூர்.

கிளை :—23, சோலியா ஸ்ட்ரீட்
பிநாங்கு S. S. (மலாயா)


Edited & Published by S A Shukoor 182, Broadway Madras 1 Printed by M. M Thani Malmalai at the Sengunthar Mithran Press, 33, Armenian Street, Madras 1.

